

ஜிஹ்வே கீர்த்தய கேஸவம
முராரிபும் சேதோ பஜ ஸ்ரீதரம்
பாணித்வந்த்வ ஸமர்ச்சயாச் யுத்கதா:
ஸ்ரோத்ரத்வய தவம் ஸ்ருணு!
க்ருஷ்ணம் லோகய லோசநத்வய ஹரே:
கச்சாங்க்ரி யுக்மாலயம
ஜிக்ர க்ராண முகுந்த பாததுளஸீம்
மூர்தன நமாதோக்ஷஜம்॥

(பொருள்): கேசியை ஸம்ஹரித்த கண்ணனை ஏ நாக்கே! நீ துதிப்பாயாக. ஏ நெஞ்சே! முராஸுரனை வதைத்த ஸ்ரீகிருஷ்ணனை பஜிப்பாயாக. இரண்டு கைகளே! நீங்கள் ஸ்ரீமந் நாராயணனை அர்ச்சியுங்கள், ஏ காதுகளே! பக்தர்களை ஒருபோதும் கைவிடாத எம் பெருமானின் சரிதங்களைச் கேளுங்கள். ஏ கண்களே! பகவானைத் திருப்தியாய் சேவியுங்கள். ஏ கால்களே! ஸ்ரீ மஹா விஷ்ணுவின் ஸந்நிதியை நோக்கிச் செல்லுங்கள். ஏ மூக்கே! நீ கண்ணபிரானின் பாதங்களில் அர்ச்சிக்கப்பட்டுள்ள துளஸீ தளத்தின் வாசனையை அனுபவிப்பாயாக. தலையே! நீ சர்வலோக சரண்யனை வணங்குவாயாக.

ஸ்ரீ முகுந்தமாலை-16-குலசேகராழ்வார்.

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியா:
திரு. பி. வி. ஆா. கே. பிரஸாத், I.A.S.,
செயலாட்சித்தலைவா,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியா:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம,
திருப்பதி.

அச்சிடுபவா:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
EDITOR
'Sapthagiri'
T. T. D. Press Compound1
TIRUPATI-51750.,




# ஸப்தகிரி

ஆகஸ்ட் 1979 மலர்: 1(
இதழ் :

## உள்ளுறை



அட்டைப் படம்: திருமலையிலுள்ள ஓர் அரிய புவியியல் வளைவு.

# ஆசிரியர் உரை

இறை நம்பிக்கையினை ஒரு மூடநம்பிக்கை என்று கூறுவது மட்டுமன்றி, அவ்வாறு இறைநம்பிக்கைக்கொண்டு விளங்கும் நபர்களை பலவகைகளில் தாழ்த்தியும், தாக்கியும் வரும் இரண்யகசிபுவின் வாரிசுகளாக விளங்கும் பலர் இவ்வையகத்தில் வாழ்ந்து வருவது ஒருபுறம் இருக்க, வாழ்வியல் மெய்ம்மைக் கோட்பாட்டினருக்கும், பொதுவுடைமைக் கொள்கையினர்க்கும் இந்துசமயத்தின் சிறப்பு அம்சமான இறைவன் மேற்கொள்ளும் அவதாரம் பற்றிய எண்ணத்தில் நிலவும் கருத்துவேறுபாடு பன்னெடுங்காலமாக தீர்க்கப்படாமல் இருந்து வருகின்றது. எப்போது யாரால் தோற்றுவிக்கப்பட்டது என்று துணிந்து கூறமுடியாத இந்துமயம் கூறும் அடிப்படை சமய உண்மைகளை, மாறிவரும் சமுதாயப பேரிரைச்சலால் தாக்குண்டு பகுத்தறிவு என்ற போர்வையின் கீழ் அலசி ஆராயும் அவர்களுக்கு இறைவனின் அவதார ரகசியம் ஒரு நகைப்பிறகுரிய செய்தியாகவே விளங்கும். ஆனால் மானிடர் மாண்புறும் வகையில், வாழ்க்கை ரகசியத்தை விளக்கி, மண்ணுலகில் அமைதியின் அவசியத்தை உணர்த்தவும், மானிடர் தங்கள் இறுதி இலட்சியமான இறைமைப்பண்புகளை அடையச் செய்யவும் பலவேறு காலங்களில் இறைவன் இப்பூவுலகில் அவதாரம் செய்கின்றான் என்பதே உண்மை. இவ்வுண்மைக்கு கிருஷ்ணாவதாரம் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

இதுவரை நிகழ்ந்த ஒன்பது அவதாரங்களில் பூர்ணவதாரங்களாகக் கருதப்படுவன இராமாவதாரமும், கிருஷ்ணவதாரமும் ஆகும். திரேதாயுகத்திற்குத் தகுந்தவாறு இராமாவதாரம் விளங்கினும் அவ்வவதாரம் விளக்கியது, ''சத்தியமே வெல்லும்'' எனும் உயர்ந்த ஒரு கொள்கையினைத்தான். மேலும் அவ்வவதாரத்தில் இராமனை விட மற்றைய பாத்திரங்கள்தாம் வாழ்க்கைக்குத்தேவையான அறிவுரைகளை வழங்கின. இராமாவதாரத்தின் குறைகளுக்கு ஈடுகட்டும் வகையில் மனுஷ்யத்வமும் பரத்வமும் ஒருங்கே சேர்ந்ததாகக் கண்ணனின் திருவவதாரம் விளங்குகிறது. ஒருவருடைய அறிவுரைகளைக் கேட்டு அவற்றின்படி ஒருவன் ஒழுகுவதைவிட அறிவுரைகளை வழங்கும் ஒருவனுடன் சரிசமமாக பழகும் சமயத்து விரைவில் நண்பனும் நாயகனுமாகலாம் என்பதை விளக்கிக்கூறும் வகையில் கிருஷ்ணவதாரம் விளங்குகிறது.

'உலகம் முழுவதும் தூங்கும் சமயத்தில் ஞானி விழித்துக்கொண்டிருக்கின்றான்'. என்ற தன் கீதை மொழிக்கேற்ப, அறியாமை எனும் இருட்டில் தத்தளித்துக் கொண்டிருக்கும் இவ்வுலகிற்கு ஒளிகாட்ட மங்கா விளக்காக திகழும் வகையில், பாலைவனத்தில் ஒரு சோலையென, இருண்ட ஆகாயத்தில் ஒரு மின்னலென, தட்சிணாயனத்தில் ஆவணி மாதத்தில் ஸ்ரீ கிருஷ்ணபக்ஷ அஷ்டமியன்று நடுநிசியில், இருண்ட சிறைச்சாலையில் கறுப்பு என்று பொருள் தரும் கிருஷ்ணன் என்ற பெயரில், பிறக்கின்றான் கண்ணன். சாதாரண மனிதனாகவே பிறந்து இடையர்களுடன் பழகி, அவர்களுக்கே உரிய வயதுக்கேற்ற வாழ்க்கையினை மேற்கொண்டு, பின்னர் தன் கடமையை உணர்ந்த வனாக நாட்டிற்கு நலம் பேணும் சாதாரண மனிதனைப் போன்று பிரச்சனைகளுக்கு வழிதேடும் வகையில் பலவித இன்னல்களை மேற்கொள்ள துவாரகையைவிட்டு அகலுகின்றான். நடப்புகளின் முடிவுகள் நன்கு தெரிந்திருந்தும் விதிவழியே செல்லுகிறான் விதியை முடிப்பவன். பல சித்து வேலைகளை செய்து மக்களை ஈர்க்கும் ஒரு செப்படி வித்தைக் காரன் போன்று தன் அவதார நோக்கத்தினை எளிதில் நிறைவேற்றிக்கொள்ள விந்தைமிகு பல அசாதரணமான செயல்களை தத்துவப் பின்னணியில் புரிகின்றான் கண்ணன். ஒரு திருடனுக்கு மற்றொரு திருடனின் கதைதான் வெகுவாகக் கவரும் என்ற வகையில் வாழ்க்கையின் எல்லாமட்டங்களிலும் விளங்கும் பல்வேறு உணர்ச்சிகளையும் பழக்கவழக்கங்களையும் கொண்டுள்ள மானிடர்களோடு 'ஜாரசோர சிகாமணி வேடம் பூண்டு' கலந்துறவாடி அவர்களைத் தன்பால் ஈர்க்கச் செய்து, தன்னுடை கருணைக்கும் அதன் மூலம் ஞானத்துக்கும் பாத்திரமாக்கிக் கடைத்தேற வைக்கின்றான் தன் அவதாரத்தினால் கண்ணன்.

அன்று துவாபரயுகத்தில் நிலவிய பிரச்சனைகள் தாம், தீமைகள் தாம் இன்றும் இப்பூவுலகில் மிகப்பரந்து விரிந்துள்ளன. அன்று கண்ணன் கூறிய ''பலனை எதிர்பார்க்காமல் உன் கடமையைச் சரிவர ஆற்றிவிடு'' என்னும் பொன்மொழிதான் கடமையைமறந்து உரிமை கோரும் இன்றைய சமுதாயத்திற்கு அடிப்படை அறிவுரையாக தேவைப்படுகின்றது. ''கடமையை ஆற்றிடும் சமயத்து ஆசையும் பாசமும் உன்னை அலைகழிக்கலாம் ஆனால் உன் மன உறுதியை சிறிதும் தளரவிடாதே'' என்னும் அறவுரைக்கு ஏற்ப தர்மத்திற்கு உதவி செய்யும் சமயத்து, தன்னந்தனியாகத் தன் அருமை மருகன் அபிமன்யு எதிரிகளால் கொல்லப்படும்போது தன்னைக்கட்டுப் படுத்திக்கொண்டு, முற்றும் தெரிந்த மாமுனிவனான கண்ணன் தன் கடமையைத் தொடருகின்றான். பழிவாங்குவது மனிதப்பண்பு அல்ல என்பதை, தன் மக்களைக் கொன்ற அசுவத்தாமரைக் கொல்ல முயன்ற பாண்டவருக்கு கூறிய அறிவுரைகள் மூலம் காட்டுகின்றான்.

அவதார ஞானமின்றி இராமன் விளங்கினாலும் இறுதியில் தன்னைசார்ந்தோரை வைகுந்தத்திற்கு அழைத்துச் செல்வது மூலம் தன்னையும் அறியாமல் அவன் விஷ்ணுவின் அம்சம் என்பதைக்கூறாமல் கூறிவிடுகின்றான். ஆனால் கண்ணனோ 'மரணம் இயற்கையின் தீர்ப்பு' என்ற விதிக்கு தானும் கட்டுப்படுவது போன்று வேடனொருவனின் அம்புக்கு இலக்காகி தன்னந்தனியாக மரணத்தைத் தழுவுகின்றான் அதுமட்டுமா? அவன் மரணத்திற்குப் பிறகு அவன் ஆசை மனைவி ருக்மணி உடன்கட்டை ஏற, மற்றொருமனைவி சத்தியபாமை தவம் மேற்கொள்ள காடுசெல்ல அவனுடைய பதினாறு யிரம் மனைவிமார்கள் பிறரால் கவர்ந்து செல்லப்பட, 'வினையின்பயனே வினைவுகள்; அதிலிருந்து மனிதன் மீளமுடியாது' என்ற இந்து சமயத்தத்துவத்திற்கு கண்ணன் சாட்சியாக விளங்குகின்றான்.

ஆகவே சமுதாயத்தில் நிலவும் பல்வேறு நபர்களுக்குரிய பொறுப்புகளையும் கடமைகளையும் தான் ஒருவனே பலவேறு நிலைகளில் எற்றுக்கொண்டு, அவ்வாழ்க்கையின் எல்லாத்துறைகளிலும் மனிதன் செயல்படும்போது ஒழுக வேண்டிய வழிமுறைகளை, பெற வேண்டிய பண்புக்கூறுகளை பல்வேறு நிகச்சிகளின் மூலம் இவ்வவதாரத்தில் எடுத்துக் காட்டுகின்றான் கண்ணன். ஆம், அவன் வாழ்க்கையின் தத்துவ விளக்கமே அவன் தந்த கீதையாகும். அக்கீதையெனும் பூஞ்சோலையில் மலர்ந்துள்ள வாழ்க்கை நெறிகளெனும் நறுமணத்தை சற்றே நாம் நுகர்ந்தோமேயானால் நம்வாழ்வும் சீர்மைபெறும்; மேன்மையுறும்.

# செய்திச் சுருக்கம்

## திருமலையில் பொருட்காட்சிச் சாலை!

இப்புனித பாரதத்தின் சமயம், சிற்பம், நுண்கலை ஆகியவற்றின் சிறப் பினையும், பெருமையினையும் விளக்கிடும் வகையில், தி. தி. தேவஸ்தானம் திருமலையிலும் திருப்பதியிலும் இரு பொருட்காட்சிசாலைகளை அமைப்பதென்று முடிவு செய்துள்ளது. இவை தற்போது தி. தி. தேவஸ்தான பொருட்காட்சிசாலை யின் சிறப்பு அலுவலராக பொறுப்பேற் றுள்ள, மதுரைக் கலைப்பொருட்காட்சி சாலையில் உள்ள கோயிலினை உருவாக்கி யவரும், அக்கோயிலின் சிறப்பு இயககு னருமான திரு. ஏ. வி. ஜெயசந்திரன் அவர்களின் நேரடிப் பொறுப்பில் உரு வாக உள்ளன. முதலாவது பொருட் காடசிச்சாலை திருமலையில் சோயிலுக் கெதிரே உள்ள ஆயிரக்கால் மண்டபத்தில அமைக்கப்படும். திருப்பதியின் பழமைப் பற்றியும், இந்து சமயம் மற்றும் தத்துவம் ஆகியவற்றின் மேம்பாட்டிற் காக தி. தி. தே. மேற்கொண்ட ஆக்கப் பூர்வமான சாதனைகளும், மேலும் குன்றுகள் மிகுந்த திருமலையிலுள்ள புவியியல் அமைப்பு, இங்கு கிடைக்கப் பெற்ற தொலபொருட்கள், அரிய புவி யியல் தோற்றங்கள் பற்றிய விவரங்கள் இக்காட்சிச் சாலையில் இடம்பெறும். இக் காட்சிச் சாலையின் மற்றொரு பகுதியில் தி. தி. தேவஸ்தானத்தின் கீழ் உள்ள எல்லாகோயிலகள் சம்பந்தப்பட்ட சிற்பம், கட்டிடககலை பற்றிய விவரங்களும் வைக் கப்படுவது மட்டுமன்றி, திருமலையில் உள்ள இயறகைத் தோற்றங்கள், அரிய காட்சிகள் ஆகியவற்றின் மாதிரி வகை களும் காட்சி சாலையில் வைக்கப்படும்.

திருப்பதியில் நம்மாழ்வார் கோயிலில் அமைக்கப்படும் இரண்டாவது பொருட் காட்சிச்சாலையில் வைணவக் கோயில் களின் சிற்பம் மற்றும் கட்டிடக்கலை மற்றும் வைணவ சமய நிகழ்ச்சிகள், விழாக்கள் பற்றிய விவரங்களும் இடம் பெறும். மேலும இங்குக் குழந்தைகளுக் கான பூங்கா ஒன்றும் அமைக்கப்படும்.

## 4-வது உலக ஸம்ஸ்கிருத மாநாடு

23-5-79 முதல் 8 நாட்கள் கிழக்கு ஜெர்மனியில் வீமாரில 4வது உலக ஸம்ஸ்கிருத மாநாடு நடைபெற்றது. 29 நாடுகளைச் சார்ந்த, 250 பிரமுகர்கள் இம்மாநாட்டில் பங்கேற்று, மனிதனின் சமய, சமூக அரசியல் துறைகளில எவ் வகையில் ஸம்ஸ்கிருதமும், அதன் இலக் கியங்களும் பங்கு பெற்றன என்பதைப் பற்றியும், இந்தியக் கலாசாரத்தின் பெருமைக்கு அவை எவவாறு துணைபுரிந் தன என்பதைப் பற்றியும அவர்கள் விவாதித்தனர். இம்மாநாடு சம்பந்தப் பட்ட சிறப்புப் பதக்கம் ஒன்றினை ஹம் போல்ட் பல்கலைக் கழகம் வெளியிட்டது.

## கோடைப் பள்ளி

மாணவச் சமுதாயத்தினிரிடையே சமய உணர்வினைத் தழைத்தோங்கச் செய்யும் வகையில், தி. தி. தே. பல்வேறு இடங் களில்இந்துசமயம்சம்பந்தப்பட்டகோடைப் பள்ளிகளை நடத்தி வருகிறது. இவ்வகை யில் ஹைதராபாத்தில் ஸ்ரீ வேங்கடேஸ்வர வேதாநத வர்த்தினி ஸம்ஸ்கிருத கல்லூரியில்ஆசிரியர்களுக்கான கோடைப் பள்ளி ஒன்று 15-5-79 முதல் 29-5-79 வரை நடைபெற்றது. 71 ஆசிரியப் பெரு மக்கள் கலந்து கொண்டு, சமயம சம் பந்தப்பட்ட கருத்தரங்குகள் நடைபெற்ற இக்கோடைப்பள்ளியின் துவக்க விழா விறகு ஆந்திர மாநிலத்தின் உயர்கல்விக் குழுவின் இயக்குநர் திரு. வி. ராமசந் திரன் அவர்கள் தலைமை வகிக்க, ஆந்திர மாநில அறநிலயத் துறை அமைச்சர் திரு. பி. வி. சௌத்ரி அவர் கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார். கோடைப் பள்ளியின் இறுதி நாளன்று ராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்த அருள் மிகு விருபானந்த சுவாமிஜி அவர்கள் பங்கேற்று, ஆருளுரை ஆற்றினர். ஆந்திரமாநில சட்டஅமைச்சர் திரு. என். பாஸகர் ராவ் அவர்களும் பங்கேற்க, இக்கோடைப் பள்ளி ஹைதராபாத் ஸ்ரீ வேங்கடேஸ்வரா வேதாந்த வர்த்தினி ஸம்ஸ்கிருதக் கல்லூரியின் முதல்வர் திரு. ஜி. ஸ்ரீராமமூர்த்தி அவர்களின் மேற்பார்வையில் நடைபெற்றது.

---

போடிநாயகனூரில் ஸ்ரீ சுப்பரமணிய சுவாமி கோவிலில திருப்புகழ் சபையின் வைகாசி விசாகப் பெருவிழா 30-5-79 முதல் 8-6-79 முடிய 10 நாட்கள் சிறப் பாக நடைபெற்றது.

சிறப்புச சொற்பொழிவு, கதாகாலட் சேபம, இன்னிசை, வழக்காடு மன்றம், ஆகியவை நடைபெற ஸ்ரீமுருகனுக்கு பால்குடம், காவடி, விஷேச வழிபாடு, ''தஙகக் கவசம்'' சாற்றுபடியுடன் இவ் விழா இனிது முடிந்தது.

தகவல்: ஏ. பாலசுப்ரமணி.



---

சென்ற இதழில் "சிறையிருந்த செல்வி" தொடர் கட்டுரையின் இறுதியில், கட்டுரை அடுத்த இதழி லிருந்து "அழகுச்செல்வி" என்ற தலைப்பில் தொடரப்படும் என அறிவிக்கப்பட்டது ஆனல் இந்த இதழிலும் கற்பின் செல்வி எனும் தலைப்பிலேயே கட்டுரை தொடரப்படுகின்றது.

(ஆ-ர்.)

# திருவேங்கடத்தந்தாதியில் அகப்பொருள்

சேலம். பா. அன்பரசு, புலவர், எம்.ஏ.,
கடத்தூர்.

## தோற்றுவாய் :

தமிழ்ச் சிற்றிலக்கியங்களில் அந்தாதி என்னும் பா வகையும் ஒன்றாகும். அந்தாதி என்னும் சொல்லை அந்தம் + ஆதி என்று பிரிக்கலாம். ஆதி = தொடக்கம்; அந்தம் = முடிவு. அதாவது ஒரு பாடலின் இறுதியில் உள்ள எழுத்து, அசை, சீர், அடி இவற்றில் ஏதேனும் ஒன்று அடுத்தப் பாடலின் தொடக்கமாக அமையும் படிப் பாடுவதாகும்.

அநதாதிச் செய்யுட்களை வெண்பாக்களாகவோ, கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களாகவோ எழுதலாம். அந்தாதியாக ஒரு நூலை ஆக்குவதால் அதனை மனனம் செய்வது எளிதாக இருக்கும் எனலாம்.

இந்நூல் திருவேங்கட மலையில் எழுந்தருளி இருக்கக் கூடிய திருமாலின் பெருமைகளை உள்ளடக்கி எழுதப்பட்டதாகும். அந்தாதி வகையான செய்யுட்களால் இந்நூல்எழுதப் பட்டிருப்பதால் இது 'திருவேங்கடத்து அந்தாதி' என்னும் பெயர் பெற்றது. இந்நூலில் உள்ள செய்யுட்கள் பெரும்பாலும் திரிபு, மடக்கு என்னும் சொல்லணியைப் பெற்றுத் திகழ்கின்றன. இது 100 செய்யுட்களைக் கொண்டது. இதன் ஆசிரியரின் இயற்பெயர் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் என்பதாகும். சிறந்த செய்யுட்களை இயற்றும் ஆற்றல் பெற்றிருந்தமையால் 'திவ்யகவி' என்று புகழப் பட்டார். இவருக்கு அழகிய 'மணவாள தாசர்' என்னும் மற்றொரு பெயரும் உண்டு. இவர் பிறந்த ஊர் திருமங்கை. இருப்பினும் தமது வாழ் நாளின் பெரும் பகுதியைத் திருவரங்கத்திலேயே கழித்தார். இவர் தமிழ் மொழியிலும், வடமொழியிலும் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். இவருடைய ஆசிரியர் 'பட்டர்' என்பவர் ஆவார்; காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு என்பர்.

பிள்ளைப் பெருமாள் இயற்றிய எட்டு நூல்களுள் (அஷ்டப்பிரபந்தம்) திருவேங்கடத்து அந்தாதியும் ஒன்றாகும். மற்ற ஏழு நூல்கள்: திருவரங்கத்து அந்தாதி, திருவரங்கக்கலம்பகம், திருவேங்கட மாலை, திருவரங்கத்து மாலை, அழகர் அந்தாதி, நூற்று எட்டுத் திருப்பதி அந்தாதி, சீரங்க நாயகர் ஊசல் என்பன.

## அகமும் புறமும் :

மனித வாழ்வு என்னும் நாணயத்தின் இருபக்கங்கள் அகம், புறம் என்பன. இதில் அகவாழ்க்கை என்பது தலைவன், தலைவி ஆகிய இருவரையும் சார்ந்தது. எட்டுத் தொகை நூல்களுள் அகப்பொருள் நூல்கள் அதிகமாக இருப்பது ஒன்றே அதன் சிறப்பை விளக்கப் போதுமானது. எனவே அகப்பொருளின் சிறப்பை உணர்ந்த பல புலவர்களுள் ஒருவராகிய பிள்ளைப்பெருமாள் ஐயங்காரும் தமது அந்தாதியில் அகப் பொருள் சுவை நிரம்பிய பல செய்யுட்களை ஆங்காங்கே அமைத்துள்ளார். திருவேங்கடத்து அந்தாதி என்னும் அழகிய பொன்மாலையில் அகப்பொருள் சுவை நிரம்பிய பாடல்களாகிய இரத்தினங்களை ஆங்காங்கே பதித்து உள்ளார் இந்நூல் ஆசிரியர் எனலாம். அப்பாடல்கள் ஆசிரியருடைய கற்பனை ஆற்றலையும், நாடகப் பாங்கினையும் எடுத்துக் காட்டுகிறது.

அப்பாடல்கள் திருவேங்கடமலையில் கோயில் கொண்டுள்ள திருமாலைத் தலைவனாகக் கொண்டு ஒரு பெண் அவனைக் காதலிப்பதாக எழுதப்பட்டவை ஆகும். புலவர்கள் தம்மைக் காதலியாகவும், இறைவனைக் காதலனாகவும் எண்ணிப் பாடுவது இயல்பு. இதனை நாயகன், நாயகி பாவம் என்றும் கூறுவர் பக்தி இலக்கிய ஆய்வாளர்.

## திருவேங்கடத்து அந்தாதியில் அகப்பொருள் :

ஒருபெண், திருவேங்கட மலையில் கோயில் கொண்ட திருமாலையே தலைவனாகக் கொள்ள நினைக்கிறாள்; அவன் மேல் காதல் கொள்கிறாள். அவனுடைய தரிசனத்திற்காகத் தவிக்கின்றாள். மூவுலகங்களையும் அளந்து பரவிய ஆற்றலை அவ்வளவு விரைவில் நேரில் காண இயலுமா? ஆற்றாமை தலைவியை ஆட்கொள்கிறது. இதனைக் கண்ட தோழி மிகவும் இரக்கம் கொள்கிறாள். தலைவியின் ஆற்றாமை தோழியை வருத்துகின்றது. தோழியின் நிலையில் இருந்து பாடுகிறார் ஆசிரியர்.

''பொரும் தரங்கத்தும் வடத்தும்
அனந்த புரத்தும் அன்பர்
கருதும் அரங்கத்தும துயில வேங்கடவ!
கண்பார்த்து அருள்வாய்
நிருதர் அங்கத்து நிறம்போல் வரும்
அந்தி நேரத்து அன்றில்
ஒருதரம் கததும் பொழுதும் பொருள்
என் ஒரு செல்வியே''

(திருவேங்கடத்து அந்தாதி : 9)

'கரையை வந்து மோதுகின்ற பாற்கடலிலும், ஊழி முடிவில் ஆலிலையிலும், திருவனந்தபுரத்திலும், அடியார்கள் எப்போதும் உள்ளத்தில் இருத்தும் திருவரங்கத்திலும் துயில்கின்ற நிலையில் உள்ள திருவேங்கடவனே! அரக்கர்களுடைய கரிய நிறம் போன்ற அந்தி நேரத்திலும், அன்றில்

(தொடர்ச்சி 33-ம் பக்கம்)

# திருமலையில் அரிய புவியியல் காட்சி

டாக்டர். என். ரமேஸன்,
Ph.D., FRAS (London) I.A.S.,

(ஆநதிர மாநில அரசின் இரண்டாவது செயலர், ஆந்திரமாநில (ஹைதராபாத்) தொல்பொருள் ஆராய்சசிச்சாலை மற்றும் அருமபொருட்காட்சிசாலையின் இயக்குநர்)

## கோயிலின் அமைப்பிடம்

ஏழுமலையான் என்று பெரும்பான்மையோரால் வணங்கப்படும் ஸ்ரீவேங்கடேஸ்வரர் எழுந்தருளியிருக்கும் புனிதத் தலமான திருமலைக் கோயில், திருமலைக் குன்றுகள் என்றழைக்கப்படும்படியான சுருண்டு விளங்கும் குன்றுகளின் ஏழு முக்கிய சிகரங்களில் ஒன்ருக அழைக்கப்படும் சேஷாசல சிகரத்தில் அமைந்துள்ளது. இப்பகுதி தென் இந்தியாவில் 13-14 வடஅஷ ரேகைகளுககும் 79 கிழக்கு தீர்க்க ரேகைக்கும் இடையில் உள்ளது.

ஆந்திர மாநிலத்தின் வடகோடியிலிருந்து கடற்கரை ஓரமாக வரும் கிழக்குத் தொடர்ச்சிமலை கிருஷ்ணு நதியைக் கடந்தபின், உள்நோக்கி இணை தொலைவான பல தொடர் குன்றுகளாகப் பிரிகின்றது. அவற்றுள் இரண்டாவது தொடர் ஒழுங்கில்லாத ஒரு கூட்டமாக அமைந்து, கிருஷ்ணுவில் ஆரம்பித்து, கர்நூலுக்குக்கீழே, ஓர் அரை வட்டமாக கடப்பை மாநிலத்தின் வழியாகச் சென்று, சிறு சிறு குவியல்களாகப் பிரிகின்றது. அவற்றுள் ஒரு பகுதியே சேஷாசலக் குன்றுகள் என்றழைக்கப்படுகிறது.

சங்க காலத்தில் இப்பகுதி தமிழ் நாட்டிற்கும், வடுகு நாட்டிற்கும (இன்றைய கன்னடம் தெலுங்கு மொழிகளைப் பேசும் பகுதி) எல்லை நிலமாக விளஙகியது. ஸ்ரீ வேங்கடேஸ்வரர் நின்றருளும் கோயிலைக் கொண்டு விளங்கும் இக்குன்று உண்மையில் மிகவும் ஆழமான இடத்தில் அமைந்து, சுற்றிலும் உயரமான பல்வேறு குன்றுகளைக் கொண்டு, ஏதோ ஒரு உட்குழிவான பள்ளத் தாககில் அமைந்திருப்பது போல் காட்சியளிக்கிறது. கோயில் இருக்கும் இக்குன்று கடல் மட்டத்திலிருந்து 3426 அடி உயரத்தில் உள்ளது.

## புவியியல் அமைப்பு

இப்பகுதியின் புவியியல் அமைப்பு அதாவது இம்மலைக்குன்றுகளானது எளிதில் பிளவுறும்படியான களிப் பாறை வகைகளை இடைச் செருகல்களாகக் கொண்டு, படிகக் கற்பாறை வகைகளால் அமைந்த இடமாக விளங்குகிறது. இதற்கு நகரி படிகக் கற்கள் என்று பெயர். இக்கற் வகைகள், திருமலைக் குன்றுகளின் அடித் தளமாக விளங்கும் கருங்கல் மற்றும் அடுக்குப்பாறைகளின் மேல் அமைந்துள்ளன. இந்நகரி படிகக் கற்கள் கடப்பை வடி நிலத்தின் பெரும்பகுதியாக விளங்கி, மேலும் இப்பாறைகளுடன் விளங்கும் இப்பகுதி அரை வட்டமாக அமைந்து மேற்கில் துரோணசலம் வரையிலும், வடக்கில் ஸ்ரீசைலத்தைத் தாண்டிக் கொண்டும், வடகிழக்குத் திசையில் ஜக்கையா பேட்டை வரையிலும், கிழக்கில் வினுகொண்டா, உதயகிரி, வெங்கடகிரி ஆகிய பகுதிகளைத் தொடர்ந்து செல்லும் வெளிகொண்டா மலைத்தொடர்கள் வரை பரந்துள்ளது.

அப்படிகக்கற்படுக்கைகளின்மேல் இயற்கையால் நிறுத்தப்பட்டுள்ள சுவற் போன்ற கற்சக்கைகளின் உருவ அமைப்புக்கள், தோற்றங்கள், மலைக்கு வரும்படியான யாத்திரிகர்களின் கண்களுக்கும், கருத்திற்கும் இயற்கைக் காட்சிகளாக விளங்குகின்றன. இப்படிகக் கற்கள் பொதுவாக பெரிய அளவில், பளிங்குத்தன்மை கொண்டு விளங்குகின்றன. இப்படிகக்கற்பாறைகள், வெளிறிய சாம்பல் நிறத்தையும் பல்வேறுபட்ட வானிநிலை காரணங்களால இளம்,பழுப்பு நிறத்துடனும் மற்றும் மஞ்சள் அல்லது செம்மஞ்சள் நிறத்துடனும் விளங்குகின்றன. இக்கற்பாறைகளின் அதாவது சக்கைப் போன்ற உட்பக்கச் சரிவுகள் தெற்கு நோக்கி உள்ளன. சில இடங்களில் செங்குத்தான கற்சுவர்களையும் பார்க்கலாம்.

## அரிய புவியியல் வளைவு

இயற்கையின் சீற்றத்திற்குப் பல்வேறு காலநிலைகளில் தாக்கப்பட்டும் அவற்றினை தாங்கிக் கொண்டு, புவியியல் வல்லுநர்களால் சுமார் 100 கோடி ஆணடுகளுக்கு முன் தோன்றியிருத்தல் வேண்டும் என்று கருதப்படும் வளைவு ஒன்று அணமையில் திருமலையில் கண்டு பிடிக்கப்பட்டது. இவ் இயற்கை வளைவுப்பாலம் திருமலைக் கோயிலுக்கு வடக்கே 1 கி.மீ. தொலைவில், மேற்கில் 60° கோணத்தில் திருமலைக்குன்றில் உள்ள ''நுணணுலி அதிர்வு'' நிலையத்திற்குப் போகும் சாலையில், அணுகும் வகையில் அமைந்துள்ளது. இவ்வளைவின் முழு இடை நீளம் 25 அடி. உயரம் 10 அடி. திருமலைக் குன்றுகள் அமைந்துள்ள கடப்பா கற்பாறை வகைகளைச்சார்ந்த நகரி படிகக்கற்களால் இவ்வளைவு உருவாகியுள்ளது.

இயற்கையால் எழுப்பப்பட்ட இது போன்ற வளைவுகள் இரணடு மட்டுமே உலகத்தில் இருக்கின்றன. ஒன்று



அமெரிக்காவில் உள்ள 'உடா வான வில் வளைவுப்பாலம்''. மற்றையது இங்கிலாந்தில் இருக்கும் டால்ரேடியன் படிகப்பாறைகளின் நிலக் கூம்புப் பகுதியில் உள்ள வளைவாகும். இவையிரண்டும் ஏற்கெனவே உலகிற்கு அறிமுகமாகிய, புகழ்பெற்ற வளைவுகள். இப்போது கண்டு பிடிக்கப்பட்டுள்ள இவ்வளைவு உலகத்தில் மூன்றாவதும், ஐரோப்பாவிலும், ஆசியாவிலும் முதலாவதுமாகும்.

## வளைவு உருவாகியதற்கான சாத்தியக் கூறுகள்

சாதாரணமாக இவ்வளைவுகள் படிகக்கற்பாறைகளின் மேல் இயற்கையின் கைவண்ணத்தால் உருவாக்கப் பட்ட சிற்பங்களேயாம். திருமலையில் உள்ள இவ்வளைவு, முன்பு ஒரு காலத்தில் ஏற்பட்ட கடலலைகளின் அரிப்பின் காரணமாக விளைந்த பயனேயாம் என்று சில வல்லுநர்கள் கருதுகின்றனர். எனினும் அப்பகுதியை ஆராய்ச்சி செய்தவிடத்து, பல்வேறு காலங்களில் ஏற்பட்ட தீவிர வானிலை காரணமாகவும், படிக்கப் பாறைகளின் மேல் பன்னெடுங்காலமாக ஏற்பட்ட மழை நீரின் அரிப்பினாலும் இம்மலைப்பகுதியின் ஒருபகுதி செதுக்கப்பட்டு, சில மூட்டிணைப்புத் தொகுதிகளின் உதவியினால் இவ்வளைவு உருவாகியிருத்தல் வேண்டும் என்று நம்பப்படுகிறது.

## நிலைநாட்டப்பெறாத புவியியல் துணிபு

திருமலைக் குன்றுகளில் காணப்படும் விந்தையான புவியியல் அமைப்புகளை ஆராய்ந்தபோது இவ்வளைவு கண்டு பிடிக்கப்பட்டது. 'எபார்ச்சியின் அன்கன்ஃபார்மிடி' (Eparchaen Unconformity) என்று அழைக்கப்படும் இவ் அரிய புவியியற்கூறுகள் திருமலைக்குன்றுகளின் ஓர் இடைநிலைப் பகுதியில் உள்ளன. இவைகளுக்கு அடித்தளமாக விளங்கும் அடுக்குப் பாறைகளுடன் கூடிய கருங்கற்குன்றுகள் கடப்பை பாறைவகைகளைச் சார்ந்த நகரிபடிகக்கற்களுடன் கூடியதாக விளங்கி, அதனூடே கூழாங்கற்களால் உண்டான பாறை வடிவமைதிகள் ஏறக்குறைய ஒரு அடி உயரத்தில் திரண்டு சுமார் 80 கோடி ஆண்டுகள் பழமை கொண்டதாக விளங்குகிறது. இவ்வமைப்பு நாட்டிலுள்ள ஒரு அரிய புவியியல் தோற்றமாகும். திருமலைக் குன்றுகளின் அடித்தளத்தின் அடிப்படை நிலமாக விளங்கும் எரி பாறைகளின் ஊடே கொண்டு விளங்கும் கருங்கற் அடுக்குப்பாறைகள் சுமார் 250 கோடி ஆண்டுகள் பழமை கொண்டவை. அவற்றின் மேல்உள்ள கடப்பை பாறைவகைகள் ஏறக்குறைய 170 கோடி ஆண்டுகள் முன்னர் தோன்றியிருக்கலாம். அவற்றில் அமைந்த நகரி படிகக்கற் பாறைகளின் காலம் 150 கோடி ஆண்டுகள் எனலாம். இப்பகுதியில்உள்ள படிவியற் படுகைப் பாறைகளுக்கும் அடித்தளத்திற்கும் இடைப்பட்ட கால இடைவெளியே 'எபார்ச்சியன் அன்கன்ஃபார்மிடி' எனும் இவ்அரிய புவியியல் அமைப்புத் தோற்றத்தை உருவாக்கியுள்ளது. இவ்வரிய வளைவுப்பாலம், மலையின் சமவெளிப்பரப்பிற்குஇட்டுச் செல்லும் முனைப்பிலிருந்து புதிய மலைவழிப் பாதையில் 18 வது கிலோ மீட்டரில் உள்ளது.

## தேசிய புவியியல் நினைவுச் சின்னம்

இவ்வளைவினை ஒரு தேசிய புவியியல் நினைவுச்சின்னமாக பிரகடனப்படுத்துவதென்று முடிவு செய்யப்பட்டுள்ளது. நாட்டில் இது போன்ற இயற்கை எழுப்பிய வளைவுகள் 13 உள்ளன. இது 14-வதாகவிளங்குவதோடு மட்டுமின்றி, ஆசியா மற்றும் ஐரோப்பா கண்டங்களில் இதுவே மிகப்பழமையான அதாவது 250கோடி ஆண்டுகள் வயதான, ஒரு இயற்கை விளைவாக விளங்குகிறது.

திருமலை திருப்பதி தேவஸ்தானம், தற்போது இத்தேசிய நினைவுச்சின்னத்தைப்பாதுகாக்கும் பொறுப்பினை ஏற்றுக் கொண்டுள்ளதைத் தொடர்ந்து கீழ்வரும் ஏற்பாடுகளை மேற்கொண்டுள்ளது.

1. இவ்வளைவினைச்சுற்றி தகுந்த வேலி அமைத்து, இங்குப் பூங்கா ஒன்றினை அமைத்தல்.

2. இவ்வளைவு தூர்ந்து விடா வண்ணம் பாறை இடுக்குகளை அரைச் சாந்து கொண்டு மெழுக்கவும் வளைவு

# நிம்மதி என்றும் நிலைத்து நிற்கும்!

கே. எஸ். சங்கரநாராயணன்
*கல்பாக்கம்*

முருகன் எங்கள் தலைவன் - அவன்
என்றும் கட்டழகன்
தருவான் இன்பம் இறுதிவரை - அவனை
வணங்கிடுவோம் உயிர் உள்ளவரை.

வள்ளி, தெய்வயானையோடு வந்திடுவான்,
வற்றாத செல்வம் தந்திடுவான்,
புள்ளி மயிலேறிப் புன்னகை பூத்திடுவான்,
புதிய பாதை காட்டிடுவான்.

கருவிலே திருவானவன் - நம்மைக்
கண்ணை இமைபோல் காப்பானவன்,
வருவான் சுந்தர வடிவேலன் – தினமும்
கருணை என்றும் வழங்குவானவன்.

காற்று, வெய்யில், மழை தந்து
கனிவாய் நம்மைக் காப்பான்,
வற்றாத ஜீவநதியாய் வந்து
வளமான வாழ்வு தருவான்.

விதியையே மாற்றிடும் அவன்
பன்னிரு திரு விழிகள் தானே !
மதி மயங்கி நிற்கின்ற வேளை
மதியாய் வழி காட்டுவானே.

கௌரி மைந்தன் அவன்—கார்த்திகை
தேவியர் வளர்த்த புதல்வன்,
சௌரிராஜன் மருகன் — என்றும்
சௌபாக்கியம் நமக்குத் தருபவன்.

கந்தன் பெயரைச் சொன்னால்
கவலையெல்லாம் கலங்கி ஓடும் ! உமை
மைந்தன் பாதம் பணிந்தால்
நிம்மதி என்றும் நிலைத்து நிற்கும்!

விழுந்து விடாவண்ணம் தகுந்த துணையாக கட்டமைப்புகளைக் கொண்டு நிறுத்துதல்.

3. இவ்வளைவுக்குச் செல்லும் யடிபான பாதையை செப்பனிட்டு சீர்செய்தல்.

4. இவ்வளைவு பற்றிய அறிவிப்புப் பலகைகள் பலவற்றை திருமலையில் தகுந்த இடங்களில் அமைத்தல்.

5. இத்தேசிய நினைவுச்சின்னத் தினை தன் சொந்தப் பராமரிப்பில் வைத்தல்.

தற்போது இவ்வரிய வளைவினைக் காண நூற்றுக்கணக்கில் பக்தர்களும், யாத்திரிகர்களும் வந்தவண்ணம் உள்ளனர். மனிதகுலத்தின் மேன்மைக்காக ஸ்ரீ வேங்கடேஸ்வரர் ஸ்வயம்பு உருவத்தில் திருமலையில் தோன்றியதாக புராணங்கள் கூறுகின்றன. கோயிலில் உள்ள இறைவனின் துருவமூர்த்தியின் உயரமும் இவ்வளைவின் உயரமும் ஒரே அளவாக இருப்பது விந்தை மிகு நிகழ்ச்சியாகும். மேலும் இவ் அண்டத்தின் நாயகனான இறைவன் முதலில் திருமலையில் ஒரு மாபெரும் சக்தியாக உருவெடுத்து இறங்கி, பின்னர் மலையினை உடைத்துக் கொண்டு இவ்வளைவிலிருந்து வெளிவந்து, பிறகு மெதுவாக தன் தெய்வீக சக்திகளை அடக்கிக் கொண்டு இந்த அரிய புவியியல் படிகக்கற்பாறைகளின் பாதையின் வழியாக வந்து, தற்போது, கோயிலில் புகமுடனும், ஒளியுடனும் நின்றவண்ணம் அருள் புரியும் இடத்திற்கு வந்து நிலையெய்தினர் என்று நம்பப்படுகிறது. எதுவாயினும், இறைவன் திருமலையில் ஸ்வயம்புவாக உருவெடுத்தார் என்ற நம்பிக்கைக்கு இவ் அரிய வளைவும், அது இடம் பெற்றுள்ள புவியியல் அமைப்பும் முக்கியத்துவம் தருகின்றன என்பதை மறுக்கமுடியாது.

(தமிழாக்கம் : உமாராம்.)



# அமுதினைக்கண்ட கண்கள்

மா. வரதராஜன்

ஸ்ரீய: பதியான ஸர்வேஸ்வரன் தன் ஸௌலப்ய குணத்தாலே உலக மக்களை உய்விக்கத் திவ்யமங்களத் திருமேனிகொண்டு அர்ச்சாமூர்த்தியாய்ப் பல திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருக்கிறான். பிள்ளைலோகாசாரியர் தமது ஸ்ரீஸூக்திப்படி த்வயப்ரகரணத்தில் ''கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம். ஸௌலப்யத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்'' என்று குறிப்பிடுகிறார். ''ஸௌலப்யமாவது கண்ணுக்கு விஷயமன்றிக்கேயிருக்கிற தான் கண்ணாலே கண்டு ஆச்ரயிக்கலாம்படி எளியனாயிருக்கை. ஸௌலப்யத்துக்கு ஸீமாபூமி 'தமருகந்த தெய்வுருவம் அவ்வுருவந்தானே' (முதல் திருவந்தாதி-44) என்கிறபடியே ஆச்ரிதர் உகந்தது ஒன்றைத் திருமேனியாகக் கொண்டு எப்போதும் ஸந்நிதி பண்ணியிருக்கும் அர்ச்சாவதாரம்'' என்று பொருள்விளக்கம் தருகிறார் மணவாள மாமுனிகள். மேலும் இவர் திருவாய்மொழி நூற்றந்தாதியில் ''இந்நிலத்தில் அர்ச்சாவதாரம் எளிதென்றான்'' என்கிறார். ஆக, ஞானம், பலம், ஐஸ்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் ஆகிய தன்மைகளோடு ஸௌலப்ய குணத்தையும் கொண்டு அர்ச்சாமூர்த்தியாய்த்திருவரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கிறான்திருவரங்கன். ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் அனுபவித்துப் பாடிய இப்பெருமானை நம்பெருமாள், பெரிய பெருமாள், அழகிய மணவாளன், ஸ்ரீரங்கநாதன் என்று பல திருநாமங்களைக் கொண்டு அனுபவிப்பர் நம்பெரியோர்கள். ஆழ்வார்களுள் பாணர் குலத்தில் வளர்ந்த திருப்பாணாழ்வார் நம்பெருமாளைப் பாடிப்பெற்ற பேறு சாலச் சிறந்ததாகும்.

இப்பாண் பெருமாள நம்பெருமாளைக் காண வேண்டும் என்கிற ஆவலாகிய பரபக்தியும், நம்பெருமாளைக் காணப் பெற்றதாகிய பரஜ்ஞானமும், கண்டபிறகு அவரைப் பிரியாமலிருந்து நித்யகைங்கர்யம் செய்ய வேண்டும் என்கிற பரம பக்தியும ஒருங்கே அமையப் பெற்று,

''என்றேனும் கட்கண்ணால் காணாத வவ்வுருவை
நெஞ்சென்னும் உட்கண்ணேல் காணு மூணார்ந்து''

(பெரிய திருவந்தாதி-28) என்று நம்மாழ்வார் அருளிய படியே திருவரங்கனை எப்போதும் தேவகானத்தில் பாடிக்கொண்டு காவிரி நதிக்கரையில் வாழ்ந்து வந்தார்.

இவ்வளவு ஒழுக்கம் நிறைந்த பாகவதராகிய பாண் பெருமாளிடம் அபசாரப்பட்ட லோக சாரங்க முனிவர் மூலமாக பாண் பெருமாளைத் தோள் மீது ஏற்றி வரவழைத்து ஆட்கொண்டான் திருவரங்கன். அத்தருணத்தில் மஹாபாகவதரான பாண் பெருமாள், நம் பெருமாளின் எளிமைக் குணத்தை எணணிக் காதல் கடல்புரைய விளையப் பெற்று, அதனால் நம்பெருமாள் தனது திவ்யமங்களத் திருமேனியை திருவடி முதல் திருமுடிவரை காட்ட, அவ்வதிசயத்தைக் கண்டு அனுபவித்து அவ்வனுபவம் உள்ளடங்காமல் வழிந்த 'அமலனாதிபிரான்' என்கிற பத்துப் பாசுரங்களாலே திவ்ய மங்களத் திருமேனியை விவரிக்கிறார் உலகுக்கு ஆழ்வார். அதனால் நம் பெருமாள் உகந்து ஆழ்வாரைத் திருமேனியோடு தன் திருவடிகளிலே சேர்த்துக் கொண்டான். இவ்விடத்தில் 'அமலனாதிபிரான்' முதல் ஒன்பது பாட்டுக்கள் ஆழ்வார் தாம் லோகசாரங்கமுனிவரின் தோளிலிருந்து கர்ப்பக்ருஹத்திற்கு செல்லுவதற்கு முன்பு பாடினார் என்றும், பத்தாம் பாட்டு திருவரங்கனைக் கண்ட மாத்திரத்தில் அருளினார் என்றும் பெரியோர் பணிப்பர்.

இனி, ஆழ்வார் அருளிய அமலனின் திருமேனி வைபவங்களைச் சிறிது சிந்திப்போம்.

''அமலனாதிபிரான்...ஒக்கின்றதே'' என்கிற (1) பாட்டால் எம்பெருமானாகிய சேஷிபக்கல் சேதனனை சேஷபூதன் மண்டிக்கிடக்கும் துறையாய்த் திண்கழலான அழகியமணவாளனது திருவடித் தாமரைகள் தன் கண்களுக்குள்ளே புகுந்தனவாக அனுபவிக்கிறார் ஆழ்வார். பரிசுத்தனும், உலக உற்பத்திக்குக் காரணமானவனும், அடியார்களுக்குத் தன்னை ஆட்படுத்தலாகிய சீல குணமுள்ளவனும், பரிமளம் மிக்க சோலைகள் நிறைந்த திருவேங்கடமலையில் நித்யஸூரிகள் ஆச்ரயிப்பதற்குத் தங்கியிருந்து அடியார்களுடைய குற்றங்களை தோஷமாக நினையாமல் குணமாக எண்ணும் வத்ஸலனும், நீதியால் பரமபதத்தை ஆள்பவனுமாய் உயர்ந்த மதிள்களையுடைய திருவரங்கத்தில் கண்வளர்பவனான அழகிய மணவாளனுடைய திருவடித்தாமரைகள் வந்து என் கண்ணினுள்ளன என்பதுதான அவ்வனுபவம்.

''உவந்த .. .. என் சிந்தனையே'' என்கிற (2) பாட்டால் தமது சிந்தனை திருவடிகளிலிருந்து திருவரையில் சாத்திய சிவந்த ஆடையின் மேல் சென்றதாகக் கூறுகின்றார் ஆழ்வார்-மகிழ்ச்சியோடு கூடிய மனத்தையுடையவராய் மூன்று உலகங்களையும் அளந்ததனால் உயர்த்தியை அடைந்த பெரியதிருமுடியை உடையவனாய், அக்காலத்தில் அரக்கர்களை அம்பெய்

திக் கொன்ற காகுத்தனும் இன்று மணம்மிக்க சோலைகளையுடைய திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள எம் பெருமானுடைய திருவரையில் சாத்திய திருப்பீதாம்பரத்தின் மேல் என் நினைவானது பதிந்தது என்று.

அத்திருப்பீதாம்பரத்தின் அழகு திருநாபீ கமலத்திலே வீசின படியை அனுபவிககிறார் ''மந்திபாய.......... இன்னுயிரே'' என்கிற (3) பாட்டால்- குரங்குகள் தாவி விளையாடும் வடக்குத் திக்கிலுள்ள திருவேங்கடமலையில் நித்ய ஸூரிகள் பூஜை செய்யும் பொருட்டு நிற்பவனும், திருவரங்கத்திலே தன தாளுந்தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி' என்கிறபடியே எல்லா அவயவங்களின் அழகும் பொலியும்படி விளங்கும் அழகியமணவாளனின் செவ்வானம் போன்ற திருப்பீதாம்பரமும், அதன்மேல் நான்முகனைப் படைத்த ஒப்பில்லா அழகையுடைய திருநாபீக் கமலமும் என்னுடைய மனத்தில் ஆழ்ந்து பதிந்து களிப்படையச் செய்தது என்று இபபாட்டில் 'வானவர்கள் சநதி செய்யநின்றான் அரங்கத்தரவினணையான்' என்ற தொடருக்கு 'உபயகாவேரி நடுவில் ஸ்ரீரங்கத்தில் பாங்காகக் கண் வளர்ந்தருளுவதற்காகச் சேனுயர்ந்த திருமலையிலே நின்று இடம் பார்த்தான போலும்' என்று நம் ஆசார்யாகள் அருளுவதாக மஹாவித்வான் ஸ்ரீகாஞ்சீ ப்ர. அண்ணங்கராசார்ய ஸ்வாமி வெகு அழகாக விவரிக்கிறார்.

''சதுரமாமதிள் .. உலாகினறதே'' எனகிற (4) பாட்டால் திருவயிற்றில் அலங்கரிக்கப்பட்டுளள 'உதரபந்தம்' எனனும் திருவாபரணத்தை அணிநத நமபெருமாளின் பெருமையைக் கூறுகிறார்—நாற்புறமும் உயர்நத மதிள்களால் சூழப்பட்ட இலங்கைக்கு அதிபதியான இராவணனின் தலைபத்தும் உதிரும்படி இணையில்லாத கூர்மையான வில்லை வீசியவனும், கடல்போல் குளிர்ந்த வடிவையுடையவனும், வண்டுகள் மதுரமாக இசைபாடவும், மயில்கள் கூத்தாடவும தகுதியான திருவரங்கத்திலுள்ள ஸ்ரீரங்கநாதனுடைய திருவயிற்றில் சாத்தியுள்ள 'உதரபந்தம்' என்னும் திருவாபரணம் எனது மனத்துள் நிலைத்து நின்று உலாவுகின்றது என்று.

''பாரமாய ........கொண்டதே'' எனகிற (5) பாட்டால் தாம் முற்பிறவியில் செய்த பாக்கியத்தால் பிராட்டியுடன் கூடிய திருமார்பையுடைய எம்பெருமானுக்கு தாஸனாக அடிமைப்பட்டதை விளக்குகின்றார்—பொறுக்க முடியாத பழைய வினைகளைத் தொலைத்து அழகிய மணவாளன் என்னைத்தன் அன்புக்குப் பாத்திரமாகச் செயததன்றி என் ஹ்ருதயத்திலும் புகுந்தான். இதற்கு நான் கோரமாதவம் செய்தேன் போலும்—அவனுடைய முத்துமாலையும்,பெரிய பிராட்டியாரும் விளங்கும் திருமார்பன்றோ அடியேனை அடிமையாக்கிக் கொண்டது எனறு. இவ்விடத்தில் ''செய்தனன்'' என்பதனைப் படர்க்கையாகக் கொண்டு அதை அரங்கத்தம்மானுடைய செயலாக்கி, ''ஒரு சேதனனைப் பெறுதை ஈச்வரனுக்குப் பரமபுருஷார்த்தமாகையாலே தவம் செய்ய வேணடியவன் அவனே'' என்று வெகு அழகாக அனுபவிக்கிறார் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி.

''துண்டவெண்.......கொண்டதே'' என்கிற (6) பாட்டால் அழகிய மணவாளனது திருக்கழுத்தின் தன்மையைக் கூறுகிறார் ஆழ்வார்—வெளுத்த சநதிரனை முடியில் தரித்த சிவனுடைய க்ஷயததைப் போக்கியவனும், அண்டங்களையும், அணடங்களுக்குட் படட தேவாதிபதார்ததங்களையும், அண்டாவரணங்களையும், ஒப்பற்ற மஹாப்ருதிவியையும், ஏழுகுலபர்வதஙகளையும், மற்றும் எல்லாவற்றையும் பரளயகாலத்தில் அமுது செய்த அழகிய மணவாளனது திருக்கழுத்து எனனைத் தாஸனாக்கி உஜ்ஜீவிப்பித்தது கணடீர் என்று.

## கோவிந்தனைப் போற்றுவோம்

ஆர். ராஜாராமன், சென்னை-44.

புண்ணிய (ர) புருஷோத் தமா—என
இனியவா இன்சொல் அமுதா!
பண்ணிய வினைதான் தீர
இப்புவியில் தோன்றிய தீரா!

திருமாலவன் வடிவில் வந்த
திருமாதவா 'கோவிந்த ராஜா'
கருமையில் கண்ண ஞகிக-கொணட
கடமையில மன்ன ஞகி

மோரினில் வெணணைய போல—புவியில்
மோ(ன)தவம் செய்தாய் ஐயா!
சக்தியின் அருளைப் பெறறு
சஞசலம் தீர்த்தாய் ஐயா!

யாவரும் போற்றும் வண்ணம்
பாரினில் நன்மைச் செய்தாய்
யானும உய்யும வண்ணம்
நாளும் உன்னைப் போற்றுவனே!

''கையினர். . . . . . .கவர்ந்ததுவே'' எனகிற (7) பாட்டால் நம்பெருமாளின் சிவந்த திருப்பவள வாயின அழகைஅநுபவிக்கிறார் ஆழ்வார்—எம்பெருமான் ஒரு கையில் திருச்சங்கையும் ஒருகையில் திருச்சககரத்தாழ் வானையும் ஏந்துமவனும்,பச்சைமாமலை போன்ற திருமேனியையுடையவனும், திருத்துழாயின மணம் கமழும் உயர்ந்த திருமுடியை உடையவனும், அழகு மிகக திருவரஙகத்தில திருவனநதாழ வானுகிய இனிய மென் பளளி மீது கண வளாநது தன்சிவநத திருப்பவள வாயைக் காட்டும் காட்சி 'ஐயோ! என்னைச் சிநதை கவர்ந்ததுவே' என்று. இவ்விடத்தில் ஸ்ரீகாஞசி ஸ்வாமி 'எம்பெருமானை முழுக்க அனுபவிக்கப் பார்த்திருக்கையில் இடையிலே அதரம் (பவளவாய்) நெஞ்சைக் கொள்ளை கொண்டுவிட்டதே! இதற்கு என்செய்வேன்! என்பார் போலே 'ஐயோ' எனகிறார்'' என்று அனுபவிக்கிறார்.

''பரியனாகி. . . . . . செய்தனவே'' என்கிற (8) பாட்டால் அழகிய மணவாளனது திருக்கணகளின் பெருமையைத் தாம் வாய்வெருவி, பலரும் பேயனென்று ஏசும்படி உன் மத்த நிலைமையை அடைந்து விட்ட தாக அருளிச் செய்கிறார் ஆழ்வார்- தூணாய் அதனூடு அரியாய் வந்து தோன்றி அஸுரனான இரணியனுடைய சரீரத்தைக் கிழித்து எறிந்தவனும், பிரமன் முதலிய தேவர்களாலும் அணுகமுடியாதவனும், உலகுக்கெல்லாம் ஆதிப்பிரானுமான எம்பெருமான் திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கின்றான். அப்பெருமானது கறுத்த நிறமுடைய - விசாலமான- பிரகாசமுடைய-செவ்வரி படர்ந்த- காதுவரை நீண்ட-பெருமை பொருந்திய அந்தச் சோர்விலாத திருக்கண்கள் என்னை அறிவழியச் செய்து ஸ்தம்பிக்கச் செய்தன என்று.

ஒவ்வொரு அவயவயத்தையும் அனுபவித்த ஆழ்வார் ''ஆலமா. . . . . நெஞ்சினையே''என்கிற (9) பாட்டால் திவ்ய மங்களத் திருமேனி முழுவதையும் ஒருங்கே கண்டு தன் நெஞ்சு பரவசப்பட்டதாகக் கூறுகிறார்-ஏழு உலகங்களையும் திருவயிற்றிலே வைத்து அன்றொரு நாள் பெரிய ஆலமரத்தின் சிறிய இலைமேல் ஒரு பாலகனாய்க் கண வளர்ந்து இன்று திருவரங்கத்தில் திருவனந்தாழ்வான் மேல்நித்திரை செய்யும் எம்பெருமானுடைய, சிறந்த இரத்னங்களால் செயயப்பட்ட ஹாரமும், முத்து மாலையும், மற்றும் எலலையில்லா ஆபரணங்களும் அணியப்பெற்று கருநெய்தல் மலர் போன்றதான திருமேனியானது என் நெஞ்சைக் கொள்ளை கொண்டது என்று.

''கொண்டல் . . . . . . காணவே '' என்கிற இறுதிப் (10) பாட்டால், காளமேகம் போன்ற வடிவையுடையவனும், வெண்ணெய் அமுது செயத திருப்பவளவாயையுடையவனும், தம் நெஞ்சையும் கொள்ளை கொண்டவனும், நித்ய ஸூரிகளுக்குத் தலைவனும், மேலும் தமக்குப் பரமபோக்யமான அமுதமாய் அழகிய திருவரங்கத்தில் கண் வளரும் அழகிய மணவாளனை ஸேவிக்கப் பெற்ற தம்கண்கள் வேறொன்றையும் காணமாட்டா என்று தம் ஸ்வரூபத்தை நிலைநாட்டுகிறார். இவ்விடத்தில் கூரத்தாழ்வான் மகனான பட்டர் அருளிச் செய்தது அனுபவிக்கத்தக்கது. ''யசோதைப் பிராட்டி பிள்ளை மனம் கன்றாமல் தீம்பிலே கைவளரும்படி வளர்த்த மொசு மொசுப்பெல்லாம் பெரியபெருமாள் (மூலவர்) பக்கலிலே தோற்றியிருக்கும்; வஸிஷ்டாதிகளாலே ஸுசிக்ஷிதராய் வார்ந்து வடிந்த விநயமெல்லாம் தோற்றும் படியான சக்ரவர்த்தி திருமகனை ஸ்மரிக்கலாம்படியிருக்கும் -- நம்பெருமாளைக் (உத்ஸவரைக்) கண்டால்'' என்று.

இப்பாசுரம் அருளிச் செய்தவுடனே, பெரிய பெருமாள் ஆழ்வாரை அத் திருமேனியோடு அங்கீகரித்தருள, அனைவரும் காணும் போது அப்பிரானது திருமேனியிலே அந்தர்ப் பவித்தார் ஆழ்வார்.

இவவளவு பெருமை படைதத இப்பிரபந்தத்திற்கு எம்பெருமானாருடைய ஆசாரியர்களான பெரிய நம்பிகளும், திருமலை நம்பிகளும் தனியன்கள் அமைத்துத் திருப்பாணாழ்வாரின் திருவடிகளைத் துதித்துள்ளனர்.

ஆக, இப்பிரபந்தத்தையும், திருப்பாணாழ்வாரையும் மனதில் நினைத்துக் கொண்டு திருவரங்கத்தில் கண் வளரும் அழகிய மணவாளனின் திவ்ய மங்களத்திருமேனியைக கண்டுகளிப்பது நம் கண்களுக்கு வேணடியதொரு விருந்தாகும்.



## ஸ்ரீ பத்மாவதி தாயார் ஆர்ஜித அபிஷேகம்

ரூ. 100/- செலுத்தி யாத்திரிகர்கள், திருச்சானூரிலுள்ள ஸ்ரீ பத்மாவதி தாயாருக்கு, வெவ்ளிக்கிழமைதோறும் நடத்தப்படும், சாக்கார் ஆர்ஜித அபிஷேகத்தைச் செய்விக்கலாம். இதுபோது தொகை செலுத்தும் கிருஹஸ்தரைச் சார்ந்த இரு நபர்கள், அபிஷேக பால் கலசத்தைத் தாங்கிச் செல்லவும், மற்றும் திருக்கோயிலின ஊர்வலமாக வந்த பிறகு அபிஷேகத்தைக் காணவும் அனுமதிக்கப்படுவர். வார திட்டததில் குறிப்பிட்டுள்ள மளிகைச் சாமான்களைத் தவிர, கிருஹஸ்தா செலுத்தியத் தொகையில் மேற்கொண்டு வேறு எந்தவிதமான மளிகைச் சாமான்களும் வாங்கப்படமாட்டாது. மேலும் கிருஹஸ்தருக்கு எந்தவிதமான பிரஸாதமும் வழங்கப்படமாட்டாது.

செயலாட்சித் தலைவர்.
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# மலைமீதிலே காணலாம்....

முருகனடி. எஸ். ஜெயராமன்
சேலம்டவுன்

ஜெயந்தி நகரம், செந்திலாபுரி, திருச்சீரலைவாய் என்றெல்லாம் வர்ணிக்கப்படுவது இப் புண்ய க்ஷேத்ரம். குமரக் கடவுள் சூரபதுமாதியரை வதம் செய்ய முற்பட்டதும் தமது பரிவார தேவதைகளோடு வநது முகாமிட்டதலமும் இத்திருச்செந்தூரேயாம். இங்கே சூரனை பூண்டோடு அழித்து, அவனை சேவற்கொடியாக மாற்றிக் கொண்டதால் ஜயந்தி நகரம் என்ற பெயருடைத்தாயிற்று.

## மூலஸ்தான விசேஷம்:

பாலசுப்ரமண்யர்தான் மூலவர். செந்திலாதிபன், செந்திலாண்டவன் என்றெல்லாம் அழைக்கப்படுகிருன். மாமுனிவர்களும், அவதாரப் புருஷர்களும் ஆராதித்து வந்த தெய்வம். ஆதிசங்கரர் இந்தத்தலத்திற்கு வந்து சிறிது காலம் தங்கியிருநது புஜஙக ஸ்தோத்திரம் பாடியுள்ளதில் இருந்தே இதன் மஹிமை விளங்கும். சுகரிஷியும் அகஸ்தியரும் வழிபட்டிருக்கிருர்கள். இங்கே குரு அம்சமாகத் திகழ்கிருன் குமர குருநாதன். ஆதிகாலத்து நாடி ஜோஸ்யங்களும் குரு வழிபாட்டுக்கு இத்தலத்தையே முக்கியமாகக் குறிப்பிட்டிருக்கிற விபரமறிய வேண்டியது. கேரள ஆகம ஆச்சார முறைப்படிதான் பூஜைகள் நடைபெறுவதாக அறிகிருேம். தமிழகத்தில் போற்றிமார் நடத்தும் பெரிய க்ஷேத்திரம் இது ஒனறுதான்.

மூலஸ்தானத்தின் அமைப்பைக் கவனித்தால் எங்கும் காணப்படுவது போல் அபயகரம் இல்லை இங்கே. இது பற்றி ஒரு கதை சொல்லப்படுகிறது. அது விபரம் அறியலாமாக. ஸ்வாமி வழக்கம் போல் தந்தைக்கு (ஈசனுக்கு) பூஜை செய்து கொண்டிருந்தாராம். அந்த சமயம் நாரத முனிவர் சுவாமியைத் தரிசிக்க வந்தவர், துதி பாடவும் சுவாமி அர்ச்சனை செய்த நிலையிலேயே திரும்பிப் பார்த்தாராம். செந்தில் பாலசுப்பிரமணியன் அந்த அவசரத்திலேயே இன்றும் பக்தர்களுக்குத் தரிசனம் அளித்துக் கொண்டிருப்பதாக கூறுவார்கள். இத்தகைய விபரமும் பொருத்தமாகத்தான் இருக்கிறது.

காலச்சந்தியில் மூலவருக்குத் தாராபிஷேகம் நடத்துவார்கள். உச்சக் காலத்தில் ஷண்முகார்ச்சனையும் உண்டு. இரண்டும் அடிக்கடி இங்கே நடைபெறுகிற விசேஷம்.

## தாராபிஷேகம்-ஷண்முகார்ச்சனை

மூலவருக்கு சிரசுக்கு மேல் சிறு துவாரங்களோடு கூடிய பெரிய வெள்ளிப் பாத்திரத்தில் பசும்பாலை நிரப்பி, நிறுத்தி அபிஷேகப்பாலை மேலும் மேலும் பாத்திரத்தில் நிரப்பிக்கொண்டே யிருப்பார்கள். துவாரங்கள் வழியாகத் தாரை போன்று பால் பகவான் தேகத்தில் விழுந்து கொண்டேயிருக்கும். சுமார் மூன்று மணி நேரம் தங்கு தடையின்றி இந்த அபிஷேகம் நடந்து கொண்டே யிருக்குமாதலால், காண்போர் கண் குளிரக் காட்சியளித்த வண்ணமிருப்பான் முருகன்.

ஏராளமான செலவில் ஷண்முக நாதனுக்குப் புஷபாஞ்சலி செய்வார்கள். ஆறு பட்டர்மார் ஆறுமுகத்தை சுற்றி நின்று ஒரே மாதிரியாக ஒரே சமயத்தில் ஸகஸ்ரநாம அர்ச்சனை செய்து தூப, தீப நைவேதியங்கள் செய்வார்கள். ஒரு தடவை பார்த்து விட்டால் அப்புறம் அந்தக் காட்சி நம் கண்ணை விட்டகலாது. நாமும் அப்புண்ணியமான ஸ்தலத்திற்குச் சென்று தாராபிஷேகமும் ஷணமுகார்ச்சனையும் நடத்த அருள்புரிய வேணும் என்று பிரார்த்திப்போமாக.

## பன்னீர் இலை விபூதி

சூரபதுமனை வதம் செய்ததும் தம்மைச் சூழ்ந்து நின்ற பரிவாரங்களுக்கு சுவாமி தமது பன்னிரு கைகளாலேயே விபூதி பிரசாதம் வழங்கினராம் பகவானின் பன்னிரு கைகளுடைய ஸ்தானத்தைப் பன்னீர் இலை இன்று பெற்று, திருச்செந்தூர் "இலை விபூதி" என்ற புகழோடு அடியார் கைகளில் தேவி பிரசாதமாக வந்து சேருகிறது. பரமாச்சாரியர் ஆதிசங்கரர் புஜங்க ஸ்தோத்திரத்திலும் இந்த இலை விபூதியைப் பற்றி குறிப்பிட்டிருப்பதால் தேவ ஔஷதமாகக் கருதி இதை பக்தகோடிகள் பெற்றுச் செல்கின்றனர். குமார உபநிஷத்தின் கடைசி சுலோகமும், இதன் பெருமையை வர்ணிக்கும்போது,

விராஜ பத்ரஸ் தகுமார பூதிம-யோ
பக்த ஹஸதேனே
ஸமஸ் வீகரோதி-ஸ-ஸர்வ ஸம்பது
ஸமவாப்தி பூர்ண;
பவேத்தி ஸமயாதிதம தீர்க்க மாயு,
ஏதாத்ரு காணுகரஹ பாஸிதாய
ஓமஹம்ஸ: ஓம்தஸ்மை ஷண்முகாய
நமோ (அஸ்து)
ஸாகல்ய கோலாயவை ஷண்முகாய·

என்று கூறுகிறது.

## சூரசம்ஹாரமும் அதன் தத்துவமும்:

இறைவன் நல்லவர்களை அறக் கருணையாலும், பொல்லாதவர்களை மறக்கருணையாலும் ஆட்கொள்ளுகின்ருன்' என்பது தத்துவம். தவத்தால் வரம் பல பெற்ற சூரன் நன்மக்களுக்கும் தேவர்களுக்கும் கொடுமை பல செய்தான். மீளா நரகத்திற்கு ஆளாகி பெரும் பாவியாகி விடாக் கூடாது என்ற கருணையினுல் இறைவன் குமார நாயகனுகத் தோன்றி

(32-ம் பக்கம் பார்க்க)

# கண்டவர் பேச்சு

'நுனிப்புல்'

நம்முடைய கண்களுக்குக் கடவுள்-காட்சிக் கிட்டுவதில்லை. முகத்தில் உள்ள இவ்விரு கண்களும் வெறும் ஊனக்கண்கள் என்று கூறுவர். ஞானக் கண் வேண்டும் ஈசுவர தரிசனம் செய்ய. இவ்வாறு தம் கண்களினால் கடவுளைக் கண்ட பெரியோர் இருந்திருக்கின்றனர். தாம் கண்டது மட்டுமன்றியில், 'கண்டேன் – கண்டேன்' என்று அகமகிழ்ந்து ஆடிப் பாடி உலகினுக்குத் தாம் கண்ட காட்சியை அறிவித்தும் உள்ளனர். அந்த அடியார்கள் திருவாக்கு அவ்வளவும் ஈசுவரானுபூதியில் பிறந்தவை. கண்டவர்களும் பேசுகிற பேச்செனை நாம் ஒதுக்கி விடத்தக்கன அல்ல அவர் தம் திருப்பாடல். கடவுளைக் கண் கொண்டு கண்டபின், பேசிய பேச்சு அவை. அவற்றை இங்கே நாமும் காணலாம்.

திருநாவுக்கரசர் ஈசன் திருப்பாதம் கண்டு கவி பாடியவர். பிடிவாதமாக, எவ்வாறாயினும் திருக்கயிலையை அடைந்து சிவபெருமானைத் தரிசித்தே தீருவது எனக் காலால் நடந்தே கயிலாயம் நோக்கிக் கிளம்பியவர் அப்பர் அடிகள். கால்கள் தேய்ந்து போகப் பின் கைகளினால் தரையில் தவழ்ந்தும், பின்னர் மார்பு நிலத்தில் பட ஊர்ந்தும் சென்ற அவரை இறைவன் இடையிலேயே ஓர் அந்தணராக வந்து நிறுத்திக் குளம் ஒன்றை சிருஷ்டித்து, அதனுள் மூழ்கித் திருவையாறறிலே வெளிவந்து கயிலாயக் காட்சிக் கண்டு அனுபவிக்குமாறு அருள்வார். அவ்வாறே நீரில் அமிழ்ந்தவர் ஐயாற்றில் தலையைத் தூக்கிய போழ்து, ஈசனும் இறைவியுமாக அவருக்குத் தரிசனம் கிட்டியது. சுவாமிகள் கயிலாயக் காட்சி வினோ தங்களைக் கண்ட அதிசயத்தைக் கண்டறியாதன கண்டேன் என உவகையோடு பாடுவார்.

மாதர்ப் பிறைக் கண்ணியானை
  மலையான் மகளொடும் பாடி
போதொடு நீர் சுமந்தேந்திப்
  புகுவார் அவர் பின் புகுவேன்
யாதும் சுவடு படாமல்
  ஐயா றடைகின்ற போது
காதல் மடப் பிடியோடும்
  களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம்
  கண்டறியாதன கண்டேன்.

காலெல்லாம் தேய்ந்து போனமையின், இறைவன் சுவாமிகளை அப்படியே குளத்தில் அமிழ்த்திப் பின் ஐயாற்றில் தலை நிமிர்த்திய போது கயிலாயக் காட்சித் தந்தருளினார். எனவே 'சுவடு படாமல்' நிகழ்ந்து விட்டது இக்கயிலாய யாத்திரை. மத்த கஜமும் காதல் பிடியுமாகச் சிவ சக்தி தரிசனம் காண்கிறார் நாவுக்கரசர். ஏற்கனவே எண்ணியறியாத அதிசயக் காட்சிகளையும் கண்ணுற்றதாகப் பாடுகிறார்.

விண்ணவர் வணங்கும் விண்ணுலகின் வேந்தனை, அடியார் உள்ளத்துள் தேனாய் இனிக்கும் ஈசனை, உலகம் இயங்கப் பலவாறும் இருந்து அருளும் வெற்றி வேந்தனை, கொல்லை மேட்டில் மேயும் ரிஷப வாகனத்தானை, குழலும் முழவும் முழங்க அவற்றிற்கு இசைய ஆடும் அம்பலவாணனை, அள்ளி அடியவர்க்கு வழங்கும் கற்பக விருட்சத்தைக் கண்ணாரக் கண்டது தான்தான் என உறுதிப்பாடு தொனிக்கப் பாடுகிறார் அப்பர் சுவாமிகள். கருவறையில் உள்ள வெறும் மூர்த்தியைக் கண்டவர் அல்லர் அவர். சாட்சாத் சிவபெருமானை-தேவாதிதேவனாகவும், அடியார் தம் சிந்தை மேவிய செம்பொருளாகவும், ரிஷபா ரூடராயும், கூத்தாடும் நடராஜ மூர்த்தமாகவும்,

இந்த ஈசுவரத் திருக்காட்சி அரை விநாடியோ அல்லது கால் விநாடிப் போதோ, ஆள் அயர்ந்தாற் போல் உள்ள போழ்து, தெரிந்து மறையும் மாயமந்திர ஜாலம் அல்ல என்று உறுதியோடு கூறுகிற பாடல் ஒன்று உண்டு. கண்ணாரக் கண்டேன், அதுவும் நானே கண்டேன் என்று தெளிவாக்குவார். திருக்கற்குடி எனும் திவ்ய க்ஷேத்திரத்தில் எழுந்த பதிகம் அது.

வானவனை வானவர்க்கும் மேலானானை
  வணங்கும் அடியார் மனத்துள் மருவிப் புக்க
தேனவனைத் தேவர் தொழு கழலான் தன்னைச்
  செய்குணங்கள் பலவாகி நின்ற வென்றிக்
கோனவனைக் கொல்லை விடை யேற்றினானைக்
  குழல் முழவம் இயம்பக் கூத்தாட வல்ல
கானவனைக் கற்குடியில் விழுமியானைக்
  கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே

வாரி வழங்கும் வள்ளலாகவும் தம் கண்களினால் ஆசைத்தீரக் கண்டவர்.

பார்க்காத ஒன்றை பார்த்ததாகப் பொய் உரையும் வீணர்கள் உண்டு. நாவுக்கரசர் பெருமான் இடம் திரிபுகளுக்கு இடம் ஏதுமின்றித் தெளிவாக தாம் கண்ணுற்ற காட்சியை பிட்டுப் பிட்டு வைக்கிற அழகே தனி.

இறைவன் எழுந்தருளி நின்ற போழ்து, என்ன ஓசை கேட்டது? ஈசன் என்ன வேடம் தாங்கி நின்றார்? திருக்கரத்தில் என்ன இருந்தது? — இவ்வாறு எவரேனும் குடைந்து குடைந்து சந்தேகத்தோடு கேள்விக் கணைகள் தொடுத்தால், சுவாமிகள் தயங்காது அனைத்தும் கூறுவார். காற் சிலம்புகளின் ஒலி கேட்டது. முகத்தில் கருணை வழிந்தது. பிறைச் சந்திரன் தெரியாதபடி, அங்கொரு பாம்பு சடை மீது மூடிக்கொண்டிருந்தது. கொடியில் ரிஷபச் சின்னம் இருந்தது. அரையில் கோவணத்துணி

கயிற்றில் கட்டியிருந்தது. திரிசூலம் கூர்மையாகக் குத்தி விடும் போல் இருந்தது.

அடியாா சிலமபொலிகள ஆர்ப்பக
கண்டேன்
அவ்வவாக்கே ாந்த கருணை கண்டேன்
முடியார் சடைமேல அரவ மூழ்க
மூரிப் பிறைபோய் மறையக் கண்டேன்
கொடியார் அதன்மேல் இடபங் கண்டேன்
கோவணமும கீளும் குலாவக கண்டேன
வடியாரும் மூவிலைவேல் கையில
கண்டேன்
வாயமூர் அடிகளை நான் கண்டவாறே.

திருவாயமூர்ப் பதியிலே நான் கண்டதைக் கண்டவாறே கூறியுள்ளேன் என்று முடிககிறார்.

ஒவ்வொரு அடியிலும் இதைக் கணடேன், அதைக்கண்டேன் எனக் கூறுவது, அவ்வளவும் உணமையென்று சந்தேகப் பிறவிகளுக்குப் புரிய வைப்பதற்காக. கோவணம் கட்டியுள்ளார் பிட்சாடனர். எப்படி? எல்லாரும் போல், ஒரு கயிற்றைக் கட்டி, அதிலிருந்து எனத் தத்ரூபமா கவிளக்கியாகிறது.

முதல் அடியில், எம்பெருமானின் திருவடிகளில், சிலம்புகள் ஒலியெழுப்பியதைக் கேட்டேன் என்னுது, கண்டேன் என்கிறார் சுவாமிகள். ஆம், யாரோ சொன்னதைக் கேட்டுப் பாடவில்லை; தாமே அந்தச் சிலம்பொலியைக் கணடதாகப் பாடுகிறார்!

தெய்வ சாட்சாத்காரம் பெற்ற ஆழ்வாருள் பேயாழ்வார் ஒருவா. முதல் ஆழ்வார் மூவருள்ஒருவர்அவர். திருக்கோவலூரிலே திருமாலை நேரிலே காணப் பெற்றவர். ஒரு வீட்டின் இடைகழியிலே பரந்தாமனுலேயே நெருக்குண்டபோது, பேயாழ்வார்க்கு எம்பெருமான் தரிசனம் கிடைத்தது. அப்போது அவர் அருளியது மூன்றும் திருவந்தாதிப் பாசுரம்.

அப்பர் அடிகளைப் போலவே முற்றும், கண்டேன்—கண்டேன் என்று

இறைவனை அங்கம் அங்கமாகப் பாடுவார்.

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்—செருக்கிளரும்
பொன் ஆழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என் ஆழிவண்ணன் பால இன்று.

திருமாலுடன் திருமகளும் தரிசனம் தந்தாள். எம்பெருமானின் ஒளி வீசும் பொன்வண்ண மேனியைக் கண்டார் பேயார். கதிரவனின் கதிரொளி திருமாலின் திருமேனியின் ஓர் அம்சமாத்திரமே என்றுப்போல் தோன்றும் ஜொலிப்பு! வம்புக்கு வந்தால், வீணரை வீழ்த்தும் பொன் சக்கராயுதம் ஒரு திருக்கரத்தில்; பாஞ்ச ஜன்னியம் மறு கரத்தே தெரிகிறது.

கடல் நிறக்கோமானை இன்று கண்டேன் என்று பாடிய நாளைச் சொல்கிறார். தேதி போட்டுக் கையொப்பம் இடுகிற பாங்கில், 'இன்று' என்று நாளை மொழிவது நம் திருப்திக்காக. பழங்கதை அல்ல; இன்றைககு நடந்த விஷயம்!

'என் ஆழிவணணன்' என்பதில் உள்ள உறவு, நித்திய சூரிகளுக்கும் நம்பெருமானுக்கும் என்றுமே உள்ள தொடர்புதான்!

திருக்குடந்தைச் சார்ங்கபாணியெம்மானை ஆராஅமுதாக அனுபவித்தவர் சடகோபர். எவ்வளவு அனுபவித்தாலும், திருப்தி யுறுதவாறு, தெவிட்டா இன்னமுதாகத் திருகாட்சித் தருபவர் திருமால். எனவே நம்மாழ்வார், 'ஆராவமுதே' என விளிப்பது, அப்படியே ஈசன் திருநாமமாக ஒட்டிக்கொண்டு விடுகிறது.

ஆராவமுதே! அடியேனுடலம் நின்பா லன்பாயே
நீராயலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே
சீரார் செந்நெல் கவரி வீசும் செழுநீர்த் திருக்குடந்தை
ஏரார் கோலம் திகழக் கிடந்தாய் ! கண்டேன எம்மானே

ஆழ்வார் ஐயனோடு பேசுகிறார், ஈசனை கூப்பிட்டு. அவர் தம் பெருங்கருணையை அவரிடத்திலேயே வியந்து போற்றுவது இப்பாசுரம்.

தம் உடலைப் பகவத் பக்தியினுல் நீராகிக்கரைத்துக் கொண்டுபரவசத்தோடு பாடுபவர் சடகோபர். அடியவர் உள்ளத்தையும் உடலையும் நீராய் உருக்கிக்கரைத்து விடுபவர் நெடுமால். பாசுரத்தின் மூன்றும் அடி, உள்ளூரின் செழிப்பைப் பேசுவது. இரண்டாம் அடியோ பக்திப் பெருக்கு. அடுத்த அடி, எம்பெருமான் திருவடிகட்குக் காவேரிக் கரையின் செழுமை மிகுந்த செந்நெல் கவரி வீசிச் சாமர சேவை செய்கிறுப்போல் காற்றிலே தாழ்ந்து நிமிர்வதைச் செப்புகிறது.

இத்தகைய அழகுத் திருக்கோலம் பூண்டு, பள்ளிகொண்டுள்ளார் பரமன். அதைக் கண்டேன் எனப் பாடுபவர் பக்தர்.

எம்பெருமானின் தாமரைத் திருவடியைக் காணத் தவம் கிடப்பது பக்தர் உலகு. ஏன்? கணடவுடனேயே பழவினைகள் யாவும் சிதறுண்டுபோம். தமக்கு ஏற்பட்ட இந்தத் திவ்விய அனுபவத்தையும் ஓரிடத்தில் சடகோபர் பாடுகிறார். கண்டேன் எனப் பாசுரம் தொடங்கும்.

கண்டேன் கமல மலர்ப்பாதம் காண்ட லுமே
விண்டே யொழிந்த வினையாயின வெல்லாம்
தொண்டே செய் தென்றும் தொழுது வழியொழுகப்
பண்டே பரமன் பணிந்த பணி வகையே

பின்னிரு அடிகள் கீதாவாக்கிய எதிரொலி என்பர். தொண்டு செய்; தொழுது நில் என்ற இரு ஐயன் கட்டளைகளும் முறையே கர்ம யோகம்—பக்தியோகம் இரண்டையும் சுட்டும்.

'சர்வ தர்மான் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம் வ்ரஜ' என்ற வாக்கியத்துச் சரணாகதி தத்துவத்தையும் குறிப்பாகக் கூறுவது பாசுரத்தின் ஈற்றடி.

அந்த நாளிலேயே - குருக்ஷேத்திரப் போர்களத்திலேயே கண்ணபெருமான் கட்டளையிட்ட பிரகாரம், நான் ஈசன் திருவடி தரிசனம் செய்தவுடனேயே, என் படிவினையாவும் விண்டு, சிதறிப் போயின. திருமாலின் கமல மலரடிகளைத் தரிசித்ததுதான் தாமதம், உடனே பாவங்கள் அனைத்தும் தாமாக அகன்று போயின. இதை நான் கண்ணுல் கண்டேன் என்றும் பொருள் கூறலாம். எம்பெருமான் தரிசனத்திற்குப் பின் தப்பி நில்லுமோ பழவினைகள்?

மணிவாசகப் பெருமான் 'கண்ட பத்து' என்ற தலைப்பில் பத்துப் பாக்களைத் தொடுத்து ஒரு முழுப் பதிகம் பாடியுள்ளார். தில்லையம்பலத்தில் தாம் தரிசித்ததை, ஈசனின் அருட்பெருக்காக மகிழ்ந்து பேசுவார். ஒன்றும் அறியாத தம் உள்ளத்தினுள் புகுந்து, சிந்தையில் தேங்கி நின்று கருணையினுல் ஆட்கொண்டார் பரமேசுவரன். திருத்துருத்தித் திருத்தலத்தில் எழுந்தருளி நிற்கும் எம் பெருமானை வாதவூரர் தில்லையம்பதியிலும் காண்கிருர்.

உருத் தெரியாக் காலத்தே
உள் புகுந்தென் உளம் மன்னிக்
கருத்திருத்தி ஊன்புக்குக்
கருணையினால் ஆண்டு கொண்ட
திருத் துருத்தி மேயானைத்
தித்திக்கும் சிவ பாதத்தை
அருத்தியினுல் நாயடியேன்
அணிகொள் தில்லை கண்டேனே

ஈசனின் திருவுருவத்தினை அறியும் பக்குவம் இல்லாத பருவத்திலேயே பரமன அவர் தம் உள்ளத்தில் நுழைந்து நிலையாகச் சமைந்து விட்டாராம். பிறவியின் கோளாறுகளை நீக்கித் திருத்தி அன்போடு தடுத்தாட்கொணட பெருமானை — இனிக்கும் சிவானந்தத்தினை-ஆசையோடு நாயினும் கடையரான சுவாமிகள அழகு

மிக்கத் தில்லைத் திருப்பதியில் தரிசித் தார் என்பது இப்பா.

சிவபிரானைக் கண்டால் என்ன ? சிவ பதத்தைப் பெற்றதாகக கூறினல் என்ன? இரண்டும் ஒன்று தானே ? தம்மை பரம கருணையோடு அந்த நாளில் கை தூக்கி விட்ட சிவ பெருமான், முன் திருத்துருத்தியில் தரிசித்த மூர்த்தி, இப்போது சிதம்பரத்தில் நர்த்தனவடிவில் திருக் காட்சியளித்து விட்டாராம். தகுதி-தராதரம் - பக்குவம் என்றெல்லாம பாராது, எளியவர் உள்ளத்தில் இடம் பெற்று உய்விக்கும் கருணை வள்ளல் ஈசன்.

இப்படிதான சுநதரமூர்த்தி சுவாமி களும் பாடுவார். ஐயனைக் கண்டு கொண்டேனே என அழகுறத் தெரி விப்பார். கண்டு, பின் விட்டு விடின் யாது பயன்? கொள்ள வேண்டும் நிரந்தரமாக நெஞ்சிலே நிமலனை.

> வரும் பெரும வல்வினை
> யென்றிருந்தென்னை
> வருந்தலுற்றேன் மற
> வா மனம பெற்றேன்.
> விரும்பி யென் மனத்திடை
> மெய் குளிர்ப் பெய்தி
> வேண்டி நின்றே தொழு
> தேன் விதியாலே
> அரும்பினை அலரினை
> அமுதினைத் தேனை
> ஐயனை அறவனென்
> பிறவி வேர் அறுக்கும்
> கரும்பினைப் பெருஞ் செந்நெல்
> நெருங்கியக் கழனிக்
> கழுமல வள நகர்க்
> கண்டு கொண்டேனே

ஆதி நாட்களில் சுந்தரர், இப்படி இந்தப் பிறவித்தளைகளில் அகபட்டுக் கொண்டு விட்டோமே என வருந்திய வர் தான். ஆனுல், ஒரு நாளும் பரமனை மட்டும் மறவாத மனம் அமையப் பெற்றிருந்தார். எனவே ஈசனை நினைந்து நினைந்து மனத்தில் இருத்தி, உடல் நெடுகத் தாபம் யாவும் தணிந்து குளிர்ந்த உணர்வு பெற்ருர். விரும்பி, வெகு உள்ளன் போடு ஐயனை வணங்கி வழி பட்டார். எடுப்பில் சிறு அரும்பாகத் துளிர்த்த இறையனுபவம் பெருகிப் பல்கி மல ரென வளர்ந்து, பின இறவாத தன்மை பயக்கும் அமுதாகித் தேனுய் இனித்து நெஞ்சம் நிரமபி நினறது. அத்தகைய பரமசிவனை, பிறப்பு எனும் சாளானை வேரோடு களைத் தெறியும் அவரை, இனிக்கும் கரும்பான எம்பெருமானை 'நீர நில வளத்தோடு செழுமை கொழிக்கும் சீகாழி நகரிலே கண்டு, பற்றிக்கொண் டார அடியவர்.

கண்ணபெருமானின் திருக்கணகள் அடியார் பார்வையைக் கொக்கி போட்டு இழுத்து, நிறுத்துபவை. நம் கண்ணையும் கருத்தையும் கவ்விக் கொள்ளும் தன்மையன அவருடைய மேகம் போல் தண்மை நிறைந்து விளங்கும தாமரைக் கண்கள் கயிறு கொண்டு கட்டிப் போட்டாறபோலச் செய்து விடுவன அச்செந்தாமரை நயனங்கள்.

இப்படியெல்லாம் நம்மைத் தம் மோகனப் பார்வையினுல் அடிமைக் கொள்ளும் அந்தக் கண்ணபிரானைக் கண்டவள் நாச்சியார். ஒரு அழகிய யானைக் குட்டியாகக் காட்சித் தந்த வண்ணம், குழந்தைக் கண்ணன் முக மெல்லாம் வேர்க்க ஓடியாடி விளை யாடுகிருன். பட்டுச் சொக்காய் அணிந்துள்ளான்; வெண் முத்துக்களைச் சொககாயிலே தைத்துள்ளது, புள்ளி யிட்ட யானை போலத் தோன்றுகிறது. முத்துக் கோத்துத் தைத்த பட்டுச் சொக்காய் அணிந்த அழகிய அந்த யானைக் குட்டியைக் கணடது விருந் தாவனத்தில் என்கிறது நாச்சியார் திருமொழிப் பாசுரம்.

> கார்த தண் கமலக் கண் என்னும
> நெடுங் கயிறு படுத்தி என்னை
> ஈர்த்துக் கொண்டு விளையாடும்
> ஈசன் தன்னைக் கண்டீரோ ?
> போர்த்த முத்தின் குப்பாயப
> புகர் மால் யானைக் கன்றே போல்
> வேர்த்து நினறு விளையாட
> விருந்தாவனததே கண்டோமே

கண்ணனின் கண பார்வையினைப் புதுவைக் கோதை நெடும், நீள் கயிறு என்கிருள். ஆம், அந்தக் கயிற்றில் கோத்த மணிகள் மாத்திரமே நாம் அனைவரும். சூத்திரதாரி இவ்வுல கியல் நாடகத்திற்கு அவர்தானே ? அவர் இழுத்த இழுப்பிற் கெல்லாம கட்டுணடு இயங்கும் பதுமைகள் தானே நாம ?

பொம்மலாட்டத்தில் ஆடும் பது மைகள் எங்கேனும் ஆட்டுவிக்கும் ஆளைப் பார்த்திருக்குமா? இதுதான் ஆண்டாளின் கேள்வி! அவளோ பார்த்தவள்!

கண் விழித்துள்ள போழ்து, கட வுளைக் கண்டு விடலாம். ஆனுல் வயம் இழந்து கண் வளரும்போது, கடவுளை நடுத்தூக்கத்தில் காணபது அதிசயம். எல்லார்க்கும் கிட்டுகிற பாக்கியம் அல்ல இந்த நடுத்தூக்கக் கடவுட் காட்சி எனலாம. ஏனெனில், கன வில் கண்ணன் காட்சியளிக்கவேணடும் என்ருல், அந்தக் கண்ண பெருமான் நினைப்பே உள்ளத்தில் எப்போதும் இருக்க வேண்டும் என்பது குறிப்பு! ஆண்டாள் ஒரு நாள் இரவு கனு வொன்று கணடாள். சாட்சாத் கிருஷ்ண பகவான் கண் எதிரே நிற் கிருா. அவர் தம் செவ்விய திருக் கரத்தினுல் குனிந்து, கோதையின் காலைப் பற்றுகிருர். தொடர்ந்து, கல்யாணங்களில் நடைபெறும் அம்மி மிதிக்கும் காட்சி!

> இமமைக்கும ஏழ்ஏழ் பிறவிக்கும்
> பற்றுவான்
> நம்மை உடையவன் நாராயணன்நம்பி
> செம்மை உடைய திருக்கையால் தாள்
> பற்றி
> அமமி மிதிக்கக் கனுக் கண்டேன்
> தோழீ நான்

எடுத்த பிறப்பிலும், இனி வரப் போகும் எத்துணையோ பிறப்புககளி லும் கை தூககிவிடப்போகும் உறு துணைவராகிய சாட்சாத் நாராயணர் தம் செந்தாமரைக் கையினுல் ஆண் டாளின் காலைப் பிடித்துத் தூக்கி அம்மியின்மீது வைக்கிருர்.

(28-ம் பக்கம் பார்க்க)

# திருவொற்றியூர்

ஜெ. சீனிவாசன், சென்னை-35.

சென்னைக்கு வடக்கே சுமார் ஆறு மைல் தூரத்தில் கடற்கரை சமீபம் உள்ள ஊர் திருவொற்றியூர். தொண்டை நாட்டில் உள்ள 32 தலங்களில் ஒன்றான இவ்வூர் ஒரு பிரசித்தி பெற்ற சிவத்தலமாகும். சமய குரவர்களான அப்பர், சுந்தரர். மாணிக்க வாசகர், திருஞான சம்பந்தர் ஆகிய நால்வரும் திருவொற்றியூர் தலத்தைப்பற்றி பாடியிருக்கிறார்கள். பட்டினத் தடிகளும் இத்தலத்தைப்பற்றிப் பாடும்போது,

'' கண்டங்கரியதாம் கண்மூன்றுடையதாம்
அண்டத்தைப்போல அழகியதாம்-தொண்டர்
உடலுருகத்தித்திக்கும் ஓங்கு புகழ் ஒற்றிக்
கடலருகே நிற்கும் கரும்பு''

என்று சுவையோடு பாடி நம்மையும் அத்தலத்தை அடைந்து அவர் பெற்ற இன்பத்தைப் பெறுமாறு அழைக்கிறார்.

மற்றும் அருணகிரி நாதர், சேக்கிழார். இராமலிங்க சுவாமிகள், ஐயடிகள் காடவர் கோன் நாயனார் ஆகியோரும் இத்தலத்தைப்பற்றிப் பாடியுள்ளார்கள்.

திருவொற்றியூரில் கோவில் கொண்டுள்ள சிவபெருமானுக்கு தியாகராசர், படம்பக்கநாதர், எழுத்தறியும் பெருமான், மாணிக்கத் தியாகேசர், ஆதிபுரீச்வரர் என்றெல்லாம் பெயர்கள் தலபுராணத்தில் காணப்படுகின்றன. தியாகேசருக்கும், புற்றிடங்கொண்டான் என்ற படம்பக்க நாதருக்கும், தனிச் சன்னிதிகள் உள்ளன. தியாகராசரை உற்சவமூர்த்தியாக வழிபடுகிறார்கள்.

இக்கோயிலில் நுழைந்தவுடன் வலது புறத்தில் உள்ள சன்னிதியில் வடிவுடை அம்மன் வீற்றிருக்கிறாள். வடிவுடை நாயகி திரிபுர சுந்திரி என்றும் அழைக்கப்படும் அன்னை, மஹா வரப் பிரஸாதி என்ற நம்பிக்கையோடு பக்தர்கள், குறிப்பாக வெள்ளிக் கிழமைகளில், கூட்டம் கூட்டமாக வந்து வழிபடுகிறார்கள்.

ஞான சக்தியாகக் கருதப்படும் வடிவுடையம்மனைத் துதித்து அருட் பெருஞ்சோதியான வள்ளலார் இராம லிங்க அடிகளும் ''வடியுடை மாணிக்க மாலை'' பாடல்களை இயற்றி வழிபட்டிருக்கிறார்.

மற்றும் ஸ்ரீராமனைத் தவிர வேறு யாரையுமே பாடியறியாத தியாகப் பிரம்மமும் திருவொற்றியூர் திரிபுர சுந்தரி அம்மனைக் குறித்து அற்புதமான ஐந்து கீர்த்தனைகள் பாடிப் பரவசமடைந்திருக்கிறார்.

வங்கக் கடலருகே கோயில் கொண்டிருக்கும் திருவொற்றியூர் ஈசனை அப்பர் தேவாரத்தில்,

மனம் எனும் தோணிபற்றி
மதிஎனும் கோலை ஊன்றி
சினம் எனும் சரக்கை ஏற்றி
செறி கடல் ஓடும்போது
மதன் எனும் பாறைதாக்கி
மறியும்போது அறிய ஒண்ணாது
உனைஉனும் உணர்வை நல்காய்
ஒற்றியூர் உடைய கோவே

என்று பாடியிருக்கிறார். ஆம்! இறை உணர்வு மக்களுக்கு எவ்வளவு அவசியம் என்பதை உணர்ந்திருக்கிறார் அவர். ஆனால் அந்த உணர்வைப் பெறுவதற்கும் அவன் அருளையே நாடுகிறார்.

## மகிழமரத்தின் மகிமை

திருவொற்றியூர் சிவாலயத்தில் உள்ள ஒரு முக்கிய அம்சம் அவ்விடத்தில் உள்ள மகிழ மரமேயாகும். இதன் மகத்துவத்தை விளக்கி ஒரு கதை வழங்கி வருகிறது.

வன்தொண்டராம் சுந்தரரை இறைவன் திருவெண்ணெய் நல்லூரிலே தடுத்து ஆட்கொள்கிறார். அதன்பின் அவர் திருவாரூர் சென்று அங்குள்ள பரவையாரை மணக்கிறார். பின்னர் பல தலங்கள் சென்று இறைவனைத் தரிசித்து விட்டு திருவொற்றியூர் வருகிறார். அவ்விடம் கோயிலில் மலர் மாலைகள் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் சங்கிலி என்ற பெண்ணைக் காண்கிறார். அவள் அழகில் மயங்கி மனத்தைப்பறி கொடுத்து விடுகிறார். சங்கிலியை மணக்க விரும்பி அதற்காக இறைவன் அருளை நாடுகிறார். இறைவனும் பக்தன் சுந்தரமூர்த்திக்காக சங்கிலியின் கனவில் தோன்றி அவரை மணக்கக்கோருகிறார்; அவளும் இந்தத் திருமணத்துக்கு சம்மதித்து விடுகிறாள். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை விதிக்கிறாள். அதாவது 'தன்னை விட்டு ஒரு காலும் பிரியேன்' என்று சுந்தரர் இறைவன் சன்னிதியில் சத்தியம் செய்ய வேண்டும் என்பது. அவரும் இதற்கு ஒப்புக் கொண்டார். ஆனால் இந்த நிபந்தனையை தன்னால் நிறைவேற்ற முடியாது என்று உணர்ந்து கொண்டு இதற்கு ஒரு உபாயத்தைக் கையாள முனைந்தார். தான் தோழமை கொண்டிருக்கும் இறைவனையணுகி தான் சத்தியம் செய்யும்போது சன்னிதியை விட்டு வெளியில் இருக்கும்படி கேட்டுக் கொண்டார். கேட்ட வரம் தரும் சிவபெருமானும் அப்படியே செய்வதாய் ஒப்புக்கொண்டார். ஆனால்

அந்த ஒற்றியூர் உத்தமன் சங்கிலியின் கனவில் தோன்றி சுந்தரரின் உபாயத்தைத் தெரிவித்து அவரை கோயிலில் இருக்கும் மகிழ மரத்தடியில் வந்து சத்தியம் செய்யுமாறு அழைத்து வருமாறும், தானும் மகிழ மரத்தடிக்கு வந்திருப்பதாகவும் கூறிவிட்டார். இந்த நாடகம் எப்படி?

சுந்தரரும் மகிழ மரத்தடியில் சத்தியம் செய்து விட்டு சங்கிலியை மணந்தார். அன்று மகிழ மரத்தடிக்கு வந்த ஆதிபுரீச்வரரும் அவ்விடமே

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

1-3-79 முதற்கொண்டு திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் நிகழ்ச்சி நிரல்கள் கீழ்வருமாறு மாற்றஞ் செய்யப்பட்டுள்ளன.

**சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய்க் கிழமைகளில்;**

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை. அதாவது ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வ தரிசனம்

மதியம் 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) இரண்டாவது மணி.

மாலை

1-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்

இரவு 8-00 முதல 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)

9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி.)

**புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை (தனி.)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை, (சகஸ்ர நாம அர்ச்சனை) (தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்து முறை, சேவைக்கான ஏற்பாடுகளை மேற்கொளல் முதலியன.

6-00 முதல் 8-00 வரை ; ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) மணி.

8-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்

இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)

9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30க்கு: ஏகாந்த சேவை. (தனி.)

**வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)**

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்

3-30 முதல் 3-45 வரை: சுத்தி

3-45 முதல் 4-30 வரை: தோமாலா சேவை (தனி.)

4-30 முதல் 4-45 வரை: பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை: முதல் அர்ச்சனை; சகஸ்ர நாம அர்ச்சனை (தனி)

5-30 முதல் 6-00 வரை: முதல் மணி, பலி, சாத்து முறை.

6-00 முதல் 8-00 வரை: சாலிம்பு, 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.

8-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்

இரவு 8-00 முதல் இரவு 10-00 வரை: பெரிய சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவு மணி ஏகாந்தம்.

இரவு 10-00 முதல் நள்ளிரவு 12-00 வரை: பூலங்கி சேவை.

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30 க்கு: ஏகாந்த சேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்.

3-30 முதல் 5-00 வரை: சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 7-00 வரை: அபிஷேகம்.

7-00 முதல் 8-30 வரை: ஸமர்ப்பணை முதலியன.

8-30 முதல் 9-30 வரை: தோமாலா சேவை, அர்ச்சனை (தனி.)

9-30 முதல் 10-00 வரை: 2வது மணி, பலி, சாத்து முறை.

10-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்

இரவு 8-00 முதல் இரவு 9-00 வரை: சுத்தி, இரவு கைங்கர்யங்கள்.

இரவு 9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை; சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி)

---

குறிப்பு : சுப்ரபாதத்திற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். அர்ச்சனை, தோமாலா சேவை, அபிஷேகம் ஆகியவற்றிற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் அனுமதிக்கப்படமாட்டாது. ரூ. 4/-க்கு விற்கப்படும் சேவானந்தர டிக்கெட்டு வசதிகள் தற்போது நிறுத்தப்பட்டுள்ளன.

தங்கி விட்டதாக புராண வரலாறு ஏற்பட்டு பக்தர்கள் மகிழ மரத்தை வலம் வந்து வணங்குகிறார்கள். பிரதி வருடமும் 'மகிழடி சேவை' உற்சவம் வெகு விமரிசையாகக் கொண்டாடு கிறார்கள்.

திருவொற்றியூர், கலிய நாயனார் பிறந்த தலம் என்றும், அவர் கோயி லில் திருவிளக்குப்பணி செய்து வந்த தாகவும் பின்னர் அவர் வறுமையால் வாடி அப்பணியைத் தொடர்ந்து செய்ய இயலாத போது எண்ணெய்க் குப் பதிலாக தமது உதிரத்தையே ஊற்ற முனைந்தபோது 'இறைவனே அவர் முன் தோன்றி அருள் புரிந்தார் என்ற குறிப்பு இவ்வாலயத்தில் வைக் கப்பட்டுள்ளது.

இத்தலத்தில்தான் பட்டினத்தடி கள் வாழ்ந்து முக்தி பெற்றார் என்று கூறப்படுகிறது. அதற்கேற்ப அவரு டைய சமாதி கடற்கரையருகே உள் ளது.

## கோயில் சிற்பங்கள்

திருவொற்றியூர் கோயிலில் சில அரிய சிற்பங்களைக் காணலாம். மகிழமரத் துக்கு அருகே உள்ள ஏகபாத மூர்த்தி சிலை இதற்கு சான்றாகும். ஒரேகல்லில் செதுக்கப்பட்ட இந்த சிலை மிகவும் அழகானதும் அபூர்வமானதுமாகும்: பிரமனும் விஷ்ணுவும் சிவனிடத்தே அடக்கம் என்னும் சிவபரத்துவத்தை விளக்க எழுந்த திருஉருவே இது. படம்பக்க நாதர் மூலஸ்தானத்துக்கு முன் மண்டபத்தில் உள்ள நடனமாதர் களின் உருவங்களும் கண்ணைக் கவரு கின்றன. இக்கோயிலில் தென்புரத்தில் இருபத்தேழு நட்சத்திரங்களுக்கும் சிவலிங்க உருவில் சிலைகள் இருப்பது ஒரு விசேடமாகும். படம்பக்கநாதர் ஆலயப்பிராகாரத்தில் உள்ள வட்டப் பாறை நாச்சியார் சன்னிதி ஆதிசங்கர ரால் ஸ்தாபிக்கப்பட்டது என்று பக்தர்கள்புனிதமாக வழிபடுகிறார்கள்.

## கௌடீஸ்வரர் சன்னிதி

இமயமலைச் சாரல் அருகாமையிலி ருக்கும் கௌடதேசத்தினின்று சில ஆதி சைவ பிராமணர்கள் திருவொற் றியூர் வந்து கௌடீஸ்வரரை ஸ்தாப னம் செய்து பூஜித்து வந்தமையால் இக்கோயிலில் கௌடீஸ்வரருக்குத் தனிச்சன்னிதிஉள்ளது. அதனிடம் அக் காலத்தில் பிரணவ சப்தமான ''ஓம்'' என்று ரீங்காரம் ஒலித்ததாகக் கூறப் படுகிறது.

## திருவொற்றியூரின் தொன்மை

இத்தலத்தின் தொன்மையை ஆரா யுங்கால், அப்பர் சுவாமிகள் தரிசித்து தேவாரம் பாடியிருப்பதால், அவர் காலத்திலேயே, அதாவது கி. பி. ஏழாம் நூற்றாண்டிலேயே, இவ்வூர் பிரசித்தியடைந்திருக்கிறது. மற்றும் இக்கோயிலிலுள்ள ஏராளமான கல் வெட்டுகளிலிருந்து அரிய செய்திகள் வெளியாகின்றன. அவைகளில் முக்கிய மானது இராஜ ராஜசோழனின் குமா ரனை இராஜேந்திர சோழன் காலத் தில்தான் ஆதிபுரீச்வரர் கோயில் கருங் கற்களால் எழுப்பப்பட்டது என்று தெரிகிறது. அதற்கு முன்பு செங்கற் கோயிலாக இருந்தது போலும்.

மற்றொரு கல்வெட்டில் இராஜா தித்ய சோழனின் ராணுவ தளபதி யாக இருந்த வல்லபன் என்பவனின் சரித்திரமே அடங்கியிருக்கிறது. இவன் கி. பி. 948-ல் தக்கோலத்தில் நடந்த போரில் மன்னன் இராஜாதித்யன் உயிர் நீத்தபோது அவனருகில் நின்று போர்புரிய இயலாது போனபடியால் மனம் நொந்து கங்கை நதியில் நீராட வடக்கு நோக்கிச் சென்றான். பின்னர் திரும்பி வந்த போது அக்காலத்தில் பிரசித்திபெற்ற திருவொற்றியூர் வந்து சேர்ந்தான். அங்கே சிவதாம நெறி கள் விளக்கம் பெற்று 'சதுரானன பண்டிதன்' பட்டம் பெற்று ஒரு மடத்தை ஸ்தாபித்து சைவ சமய நெறிகளை பிரசாரம் செய்து வந்தான் என்று தெரிகிறது.

பத்தாம் நூற்றாண்டு, பதினோராம் நூற்றாண்டுகளில் வசித்து வந்த காபா லிகர், காலாமுகர், பாசுபதர் என்ற மரபினருக்கும் திருவொற்றியூர் கோவிலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்ற விஷயம் அயல்நாட்டு அறிஞர் லாரென்ஸன் எழுதியுள்ள நூலில் காணப்படுகிறது. காபாலிகள் மண்டை ஓடுகளைக் கையிலேந்திக் கொண்டு காபாலிக நெறிகளை மக்களி டையே தீவிரமாக பிரசாரம் செய் தார்கள் என்று தெரிகிறது

திருவொற்றியூரை உள்ளடக்கிய தொண்டை நாட்டுப்பகுதி, முதற் பராந்தகன ஆட்சியிலேயே சோழ நாட்டுடன் இணைந்திருக்கவேண்டும் அம்மன்னனுடைய கல்வெட்டுகள்இவ் வாலயத்தில் காணப்படுவதால் பராந் தகன் காலத்துச் சோழ நாட்டின் வட எல்லையாக இவ்வூர் இருந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

பல சோழ மன்னர்கள் இக்கோயி லைக் கட்டவும், கோயில் வழிபாடுகள் நடக்கவும் போதிய நிலபுலன்களையும் பொற் காசுகளையும் மான்யமாக அளித்திருக்கிறார்கள். இரண்டாம் ராஜராஜன் தான் பட்டத்துக்கு வந்த ஒன்பதாம் ஆண்டிலே இக்கோயிலில் நடந்த பங்குனி உத்திர உற்சவத்துக்கு நேரில் வந்திருந்தான் என்று ஒரு கல் வெட்டுச்செய்தி கூறுகிறது. இவனுக் குப் பின்னால் பட்டத்துக்கு வந்த மூன்றாம் குலோத்துங்கனும் இங்கு வந்து ராஜராஜன் திருமண்டபத்திலி ருந்து ஆனி உற்சவம் பார்த்தான் என்றும், அங்கு ஒரு தர்பாரே நடத் தினான் என்றும் கூறப்படுகிறது. சோழ மன்னர் ஆட்சி காலத்து கல் வெட்டுகள தவிர, பல்லவர், பாண்டி யர், விஜயநகர மன்னர் காலத்துக் கல்வெட்டுகளையும் இக்கோயிலில் காணலாம். பத்தாம் நூற்றாண்டு ராஷ்டிர கூட மன்னன் கிருஷ்ணன் இக்கோயிலுக்கு வந்து அவன் அன்னை யின பெயரால ஒரு அறக்கட்டளையும் ஏற்படுத்தினான என்றும் ஒரு கல் வெட்டுச் செய்தி கூறுகிறது.

இவ்வளவு மகத்துவம் வாய்ந்த திருவொற்றியூர் கோயிலுக்குச்சென்று ஆதிபுரீச்வரரையும் அன்னை வடிவு டையநாயகியையும்தரிசிப்பவர்களுக்கு இறைவனின் அருள்கிட்டுவதோடு ஒரு பழம் பெரும்பதிக்கு விஜயம் செய் தோம் என்ற மனமகிழ்ச்சி உண்டா வது திண்ணம்.



ராமாயணம் என்பது அவதார காவியம். அவதாரம் என்ற சொல்லுக்கு, பொருள் மேலேயிலிருந்து கீழே இறங்கி வருவது என்று. அப்போது ராமாயணத்தில் அவதாரம் என்று சொன்னால் யார் அவதாரம் செய்திருக்கிறார்கள்? தெய்வமாகிய திருமால் ராமன் என்கிற பெயரோடு மானிடனாகக் கீழே இறங்கி வந்து அவதாரம் செய்திருக்கிறார். தெய்வம் மனித உருவிலே வந்திருக்கிறது.

இந்த உலகிலே மிக உயர்ந்த பிறவியாகக் கருதப்படுவது, ஆறறிவு படைத்த பிறவியாகக் கருதப்படுவது, மனிதப் பிறப்பு. மனிதனைத் தவிர மற்றுமுள்ள பிறப்புக்களையெல்லாம் முன்னோர்கள் வரிசைப்படுத்தி இருக்கிறார்கள். எறும்பு முதலானவை ஓரறிவு. அதிலும் மேம்பட்டது நண்டு போன்றஇரண்டறிவு. அடுத்தது நத்தை போன்ற மூன்றறிவு. அடுத்து நாய் முதலிய நான்கு அறிவு. அதிலும் மேம்பட்டது குரங்காகிய ஐந்தறிவு. இதற்கும் மேலே மனிதன் ஆறறிவு படைத்தவன். இதுதான் பரிணாமக் கொள்கை. ஆகவே, உலகப் பிறப்புகளிலே மனிதப் பிறப்பு மிக உயர்ந்த ஒன்று. சரி. பிறவி இதோடு தான் நிற்க வேண்டும் என்று என்ன அவசியம்? மனிதனுக்கு மேலே பிறவி இல்லை என்று ஏன் இருக்க வேண்டும்?

ஓர் உயிரிலிருந்து இன்னோர் உயிருக்கு பரிமாணம் பெற்று வளர்ந்தது உண்மையாக இருக்கட்டும்; மனிதனுக்கும் மேலே பிறப்பு உண்டு! அது என்ன? ஓர் உயிரிலிருந்து இன்னோர் உயிருக்கு வரும்போது முந்தின உயிரிலுள்ள குற்றங்கள் எல்லாம் நீங்கித்தானே அடுத்த உயிர் வருகிறது? அப்போது விலங்குகளுக்கு இருக்கக்கூடிய குறைகள் எல்லாம் இல்லாமலிருப்பவன் தானே மனிதன்? அந்த அளவிலே, மனிதனுக்கு இருக்கக்கூடிய குற்றங்கள் எல்லாம் இல்லாமல் தூய்மையாக ஒருவன் இருக்கிறான் என்றாலே, அவன் மனிதப் பிறப்புக்கு அப்பாற்பட்ட தேவப் பிறப்பு! அதனாலே மனிதனுக்கு மேலே ஒரு பிறப்பு. அது தேவப் பிறப்பு என்று நாம் முடிவு செய்வோம். ஆக, குரங்கு ஐந்தாவது அறிவு. மனிதன் ஆறாவது அறிவு. கடவுள் மனிதனுக்கு மேம்பட்டவன் எனபதினாலே ஏழாவது அறிவு என்று வைத்துக் கொள்வோம்.

# குரங்கு வாலி

இனி, காவியத்தினுடைய அடிப்படைக்குவருவோம். ஏழறிவு படைத்த தெய்வம், ஆறறிவு படைத்த மனிதனாக, ராமன் என்ற பெயரோடு வந்தான் என்பது தான் ராமாயணத்தினுடைய சாரம். அந்தத் தெய்வம் மனிதனாக ஏன் வர வேண்டும்? தெய்வம் மனிதனாக வருவதன் நோக்கம், மனிதனைத் தெய்வமாக உயர்த்துவது. எப்படி எப்படி நடந்து கொண்டால் நாம் தெய்வமாக உயரலாம் என்பது நமக்குத் தெரியவில்லை.

எஸ். வி. வைத்தியநாதன்,
சென்னை - 28

ஆகவே, தெய்வமாகிய திருமால் மனிதனாக இறங்கி வந்து, நம்மைப் போலவே பிறந்து, நம்மைப் போலவே கலைப் பயிற்சிகளையெல்லாம் பெற்று, நம்மைப் போலவே திருமணம் செய்து கொண்டு நம்மை போலவே இன்ப துன்பங்களைச் சந்தித்து, இன்ன இன்ன துன்பங்கள் வந்தால் இப்படி இப்படியும், இன்னனென்ன இன்பங்கள் வந்தால் இப்படி இப்படியும் நடக்க வேண்டும் என்று நடந்து காட்டி, அதுபோல் நாமும் நடந்தால் நாமும் தெய்வமாக ஆகலாம் என்பதைக் காட்ட ராமபிரான் அவதாரம் செய்தார்.

ஆக, ஏழறிவு படைத்த தெய்வம் ஆறறிவு படைத்த மனிதனாகவந்ததன் நோக்கம், ஆறறிவு படைத்த மனிதனை ஏழறிவு படைத்த தெய்வ நிலைக்கு உயர்த்த வேண்டும் என்பது தானே? அதன்படி ராமாயணத்திலே ஏதாவதொரு மனிதப் பாத்திரம், ராமபிரானுடைய கருணையைப் பெற்று தெய்வ நிலைக்கு உயர்ந்தது என்று காட்ட வேண்டுமல்லவா? காவியத்தினுடைய சாரம் — குறிக்கோள்-இதுதான் என்றால், திருமால் ராமனாக அவதரித்ததன் பலனாக, அந்தராமனுடையகருணையைப்பெற்று இந்த மனிதன் தெய்வமாக உயர்ந்தான் என்று காட்டவேண்டுமல்லவா? அப்படி ஏதேனும் ஒரு மனிதப் பாத்திரம் காட்டப்பட்டிருக்கிறதா என்றால், இல்லை. இப்படி ராமனுடைய கருணையைப் பெற்று எந்த மனிதப் பாத்திரமும் தெய்வ நிலைக்கு உயரவில்லை என்றால் காவியத்தினுடைய குறிக்கோள் நிறைவேறவில்லை என்று தானே பொருள்.

# மனித வாலி

இங்குதான் கவிச்சக்ரவர்த்தி கம்பர் சிந்தித்து, ஏழறிவு படைத்த தெய்வத்தை ஆறறிவு படைத்த மனிதனாக இறக்கி, அவனுடைய கருணையைப் பெற்று, ஆறறிவு படைத்த மனிதன் ஒருவன் ஏழறிவு படைத்த தெய்வமாக உயர்ந்தான் என்று காட்டுவதை விட, ஆறறிவுக்கும் கீழ்பட்ட ஐந்தறிவு படைத்த குரங்கு ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதையே ஆறறிவு படைத்த மனித நிலைக்கு உயர்த்தி, பிறகு அதையே ஏழறிவு படைத்த தெய்வ நிலைக்கு உயர்த்துவதற்காகவே கம்பன் தேர்ந்தெடுத்துக் கொண்டார் வாலி என்ற பாத்திரத்தினை.

மனிதன் தெய்வமாக உயரலாம் என்று காட்டுவதை விட, மனிதனுக்கும் கீழ்பட்ட ஒரு உயிர் கூட மனிதனாக உயரலாம்; பிறகு அதுவே தெய்வமாக உயரலாம் என்று காட்டும் போது தானே காவியத்தின் குறிக்கோள் உயர்வு பெறுகிறது!

அந்த அளவிலே, கம்பன் காட்டுகிற வாலி, ஒன்று குரங்கு வாலி, இரண்டு

# தெய்வ வாலி

மனித வாலி, மூன்று தெய்வ வாலி! ராமபிரானைச் சந்திக்காத வரைக்கும் தம்பியாகிய சுக்ரீவனைக் கொல்வேன் என்று சொல்லிக் கொண்டிருக்கிற வாலி, குரங்கு வாலி! ராமபிரானைச் சந்தித்த போது, பகுத்தறிவோடு கூடிய கேள்விகளை எழுப்புகின்ற வாலி மனித வாலி! பிறகு ராமபிரானிடத்திலேயே, 'என் தம்பி சுக்ரீவனைக் காக்க வேண்டும். கொன்றுவிடக் கூடாது' என்றுவேண்டுகிற வாலிதெய்வவாலி! இப்படி குரங்கு வாலி, மனித வாலி, தெய்வ வாலி என்பதற்கு கம்பன் காட்டும் சான்றுகளோடு இப்பொழுது இக்கட்டுரையைப் பார்க்கப் போகிறோம்.

சுக்ரீவன், வாலி இருக்கின்ற இடத்திற்குச் சென்று ''தைரியமிருந்தால் வெளியே வாடா'' என்று கத்தினான், தூங்கிக்கொண்டிருக்கிற வாலி காதில் போய் இது விழுகிறது. வாலி தூக்கத்திலிருந்து விழித்து. 'யாரடா இது சுக்ரீவன் குரல் மாதிரி உள்ளதே. சே! சே! சுக்ரீவனாவது, இங்கே வருவதாவது' என்று எண்ணினான். மறுபடியும் சுக்ரீவன்கத்தினான்; வாலி, 'ஆஹா! சுக்ரீவன் குரல்தான். இது வரைக்கும் எனக்குப் பயந்து வேறு ஒரு மலையில் வசித்து வந்த அவன் இப்போது என்னுடைய தலை வாசலுக்கு வந்து போருக்கு அழைக்கிறானா! இன்றோடு அவன் சரித்திரத்தை முடித்து விடுகிறேன்' என்று சினத்துடன் படுக்கையிலிருந்து குதித்து 'வந்தனன் வந்தனன்' என்று கூப்பாடு போட்டுக் கொண்டே வெளியே ஓடினான். 'வந்தேன்' என்று சொல்லிக் கொண்டே வாசற்படியைத் தாண்டினான்; 'போகாதே' என்று ஒரு கரம் தடுத்தது! வாலி சரித்திரத்திலேயே அப்படி கிடையாது! சாதாரணமாகவே வெளியே வரும் போது தடுக்கக் கூடாது. அதுவும் போருக்குப் போகும் போது தடுப்பதா?' என்னடா இது, புதிதாக இருக்கிறதே. யார் தடுக்கிறது என்று திரும்பினான் வாலி. தடுத்தவள் தாரை.

நடுங்குகிறாள். தடுத்து விட்டாளே தவிர நடுங்குகிறாள். 'ஏன் தடுத்தாய்? என வாலி கேட்க, தாரைசொன்னாள்: ''தடுத்ததற்காக என்னை ஒன்றும் செய்துவிடக் கூடாது. எனக்கு எப்படிச் சொல்வதென்றே தெரியவில்லை ம்... இவ்வளவு நாள் வரை உங்கள் பெயரைக் கேட்டாலே பயந்து நடுங்கிக் கொண்டிருந்த உங்கள் தம்பி இன்று நீங்கள் இருக்கும் இடத்திற்கே வந்து போருக்கு அழைக்கிறான் என்றால் அவனுக்குச் சரியான துணைகிடைத்திருக்கிறது என்று உங்களுக்குத் தெரியல்லையா?''

வாலி, ''என்ன கூறினாய். எனக்கு எதிராகச் சுக்ரீவனுக்குத் துணை கிடைத்திருக்கிறதா? ஒன்றுமில்லை உன்னுடைய கவலைக்கெல்லாம் காரணம் நான் போருக்குச் சென்றால் மிகவும்தாமதித்து வருகிறேன் என்பது தான். ஆனால் இதோ, போனேன் முடித்தேன், வந்தேன் என்று வந்து விடுகிறேன். கவலைப்படாதே. எவ்வளவு சீக்கிரம் வருவேன் தெரியுமா? உனக்குத்தான் தெரியுமே. வெள்ளை நிறமான பாற்கடலில் மந்தரமலையை இட்டு, வாசுகிப் பாம்பை நாணாகப் போட்டு, தேவர்களும் அசுரர்களும் கடைந்து கடைந்து சலித்துப் போன போது, நான் சென்று, வாசுகியின் தலையை இடக் கையாலும் வாலை வலக்கையாலும் பற்றி கடகடவென்று கடைந்து எப்படி தேவாமிர்தத்தை வெளிக் கொணர்ந்தேனோ, அப்படியே வெள்ளை நிறமான உடம்பு படைத்த சுக்ரீவனே பாற்கடலாக, அவன் நடுமுது கெலும்பே மந்தர மலையாக, அவன் இரண்டு கைகளுமே வாசுகிப் பாம்பாக கடகடவென்று கடைந்து அவனது உயிராகிய தேவாமிர்தத்தைக் குடித்து நொடிப் பொழுதில் வந்து விடுகிறேன்'' என்றான்.

வாலி தம்பியை எப்படிக் கொல்வேன் என்கிறான்? சுக்ரீவன் உடம்பே பாற்கடலாம். அவன் முதுகெலும்பே மந்தர மலையாம் அவன் கைகளே வாசுகியாம். அவன் உயிரே அம்ருதமாம்! மனிதன் இப்படி பேசுவானா? இப்படி எவனாவது ஒருவன் பேசினால் அவன் மனிதனா? ஒருவரிடம் 'உங்களுக்கு வாழ்கையிலேயே பெரிய ஆசை என்ன' என்று கேட்டால் அவர் ''என் வாழ்விலேயே மிகப் பெரிய ஆசை, என் ஒரு வயதுக் குழந்தையை அம்மியிலே வைத்து, உப்பு புளி மிளகாய் எல்லாம் போட்டு, குழவியினாலே சதக் சதக் கென்று ஒட்டி ஒட்டி அரைக்கணும் சார்'' என்று சொன்னால் நாம் என்ன நினைப்போம்! நேற்று வரை நன்றாகத் தானே இருந்தார்...! அறிவுள்ள மனிதன் இப்படிப் பேசுவானா? வாலி ஏன் அப்படிப் பேசினான்? இப்போது, மனிதனா வாலி? இல்லையே. **குரங்கு வாலி!** ஆகவேதான் இப்படி முரட்டுத்தனமாகப் பேசினான்.

'விடு, விடு, ஒரு நொடியில் வருகிறேன்' என்று மறுபடியும் தாரை தடுப்பதையும் மீறிக் கொண்டு கிளம்பினான் வாலி தாரை மறுபடியும் தடுத்தாள். 'மீண்டும் மீண்டும் தடுக்கிறேன் என்று சினத்தல் கூடாது. மறுபடியும் சொல்கிறேன். இத்தனை நாள்உங்கள் பெயரைக்கேட்டாலேயே யமபயமாக இருந்த சுக்ரீவன் இன்று நீங்கள் இருக்குமிடத்திற்கே வந்து போருக்கு அழைக்கிறான் என்றால் அவனுக்குப் பக்கபலம் ஒன்று இருக்கிறது என்று தெரியவில்லையா?' என்றாள்.

வாலி கோபம்கொண்டு,'தாரையே, அப்படி யார் எனக்கு எதிராக, சுக்ரீவனுக்குச் சார்பாக அவன் பக்கம் துணையிருக்கிறார்', என்று கேட்டான். தாரை சொன்னாள். ''கோபித்துக் கொள்ளக் கூடாது. நான் கேள்விப் பட்டதைத் தான் சொல்கிறேன். அவனுக்குத் துணையாக என்று கூட சொல்லமுடியாது. உங்கள் உயிரை வாங்குவதற்காகவே 'இன்னுயிர் ராமன் நட்பு அமைந்தான்'' என்றாள்.

வாலி கேட்டான். வேறு ஒன்றும் செய்யவில்லை. தாரையின் கூந்தலைப் பிடித்து இழுத்து ஓங்கி ஓர் அறை அறைந்தான். ''என்ன சொன்னாய்! பாவி! பெண் புத்தி பின்புத்தி என்பதற்குத் தக பேசிவிட்டாயே! என்ன சொன்னாய்? இந்த உலகிலே சகோதர பாசத்தைப்போல் உயர்ந்த செல்வம் வேறு ஒன்றுமே கிடையாது என்று ஒரு தம்பிக்கு நாட்டைக் கொடுத்து ஒரு தம்பியைக் கூடவே அழைத்து வந்திருக்கிற கருணைக் கடலானராமன், எங்கள் அண்ணன் தம்பி சண்டையில் தலையிடுவான் என்றா நினைக்கிறாய்! பாவி!'' என்றெல்லாம் கூறுகிறான்.

**(தொடரும்)**

# தப்பிய பிள்ளைகளை தாயோடு கூட்டியது

முக்தி தரும் ஷேத்திரங்கள்: அயோத்தி மதுரை, மாயா, காசி, காஞ்சீ அவந்தி துவாரகா என்பவை.

ஸ்ரீ கண்ணபிரான் துவாரகையை தலை நகராகக் கொண்டு ஆட்சிபுரிந்திருந்த காலத்திலே அவ்வூரிலேயே வசிக்கும் ஒரு அந்தணர் பெருமான் கண்ணனிடம் சென்று, 'ஸ்வாமி அடியேன் மனைவி கர்ப்பவதியாகி முறைப்படி குழந்தையை பிரசவிக்கிருள். ஆனுல் அந்த குழந்தை உடனே காணுமற்போய் விடுகிறது. இம்மாதிரி மூன்று முறைகள் குழந்தைகள் பிறந்த அறையிலேயே காணுமற்போய் விட்டன. இப்போது கர்ப்பவதியாகி, இன்னும் சில தினங்களில் பிரசவிக்க வேணடியவளாக இருக்கிருள். இம் முறையாவது ஸ்வாமி தேவரீர் அனுக்ரகித்து காத்துத் தரவேண்டும்'' என்று அதிக வருத்தத்தோடு பிரார்த்தித்தார்.

அப்போது ஸ்ரீ கண்ணபிரானேடு அர்ச்சுனனும் இருந்தான் 'என்ன இது மாமா, மாயமாகஇருக்கிறதே' என்று கூறி, 'நான் கர்ப்பவதி இருக்கும் அறையை அம்புக் கூடம் கட்டி வாயிற் புறத்தில் நான நினறு இமைபோல காத்து, குழந்தையை பத்திரமாக காத்துத் தருகிறேன்' என்ருன் விஜயன.

இரண்டு தினங்கள் கழித்து தாய் கர்ப்பநோய் எடுத்து, ஒரு அழகிய ஆண் குழந்தை பிரஸவித்தாள் உடனே அக்குழந்தையும் உடலோடு முன் போலவே காணுமற் போயிற்று.

விஜயனும் வேதியனும் நிகழ்ந்ததை ஸ்ரீ கணண பிரானிடம் முறையிட்டனர்.

அவர் சற்று ஆலோசித்து ஒரு தேரில் தானும், விஜயன், வேதியர் இருவரையும் ஏற்றிக் கொண்டு ஆகாய மார்க்கமாக விரைந்து சென்ருர்.

பிறகு திருநாடு, நலமந்த நல்லதோர் நாடு, தெளி விசும்புத் திருநாடு பரம்பதம் எனறு புகழப்படும் வைகுந்தத்தின் வாயிலில் வேதியனையும் விஜயனையும் தேரினினறு இறக்கி இருக்கச் சொல்லி விட்டு தேரை வாயிலில் நிறுத்தி, தாம் மட்டும் உள்ளே சென்ருர்.

ஸ்ரீ கண்ணபிரான் வருவதைக் கணடு வைகுந்தத்திலுள்ள நித்ய சூரிகள் பிராட்டிமார்கள் யாவரும் கூடி கணணனைவரவேற்று புகழ ஆரம்பித்தார்கள் எப்படியெனில்,

பஙகயக் கண்ணன எனகோ?
பவளச் செவ்வாயன் என்கோ?
அம் கதிர் அடியன் என்கோ?
அஞ்சன வண்ணன் என்கோ?
செஙககதிர் முடியன் என்கோ?
திரு மறு மார்பன் என்கோ?
சங்கு சக்கரத்தன் என்கோ?
சாதி மாணிக்கததையே.

சாதி மாணிக்கம் என்கோ?
சவி கேனள் பொன் முத்தம் என்கோ ?
சாதி நல வயிரம் என்கோ?
தவிவு இல் சீர விளக்கம் என்கோ?
ஆதி அம் சோதி என் கோ?
ஆதி அம் புருடன் என் கோ?
ஆதும இல் காலத்து எநதை
அசசுதன அமலனையே.

அசசுதன் அமலன் என்கோ?
அடியவர் வினை கொடுக்கும்
நச்சும் மா மருநதும் எனகோ?
நலங் கடல் அமுதம் என்கோ?
அச்சுவைக்கட்டி எனகோ?
அறுசுவை அடிசில் என்கோ?
நெய்ச்சுவைத் தேறல என்கோ?
கனி என்கோ? பால் எனகேனே?

பால் என்கோ? நான்கு வேதப்
பயன் என்கோ? சமய நீதி
நூல் என்கோ? நுடங்கு கேள்வி
இசை என்கோ? இவற்றுள் நல்ல
மேல் என்கோ? வினையின் மிக்க
பயன் என்கோ? கண்ணன் என்கோ?
மால் என்கோ? மாயன் என்கோ?
வானவர் ஆதியையே.

கண்ணனை மாயன் தன்னை,
கடல் கடைந்து அமுதம் கொண்ட
அண்ணனை, அச்சுதனை,
அனந்தனை அனந்தன் தன்மேல்,
நண்ணி நன்கு உறைகின்ருனை,
ஞாலம் உண்டு உமிழ்ந்த மாலை,
எண்ணும் ஆறு அறியமாட்டேன்
யாவையும் வெரும் தானே !

என்று பலவாருக ஸ்ரீ கண்ணபிரானை வரவேற்று எல்லா உபசாரங்களும் செய்தனர். கோபாலன் அங்கு வேதியர் குழந்தைகள் நால்வரும் விளையாடிக் கொண்டிருப்பததைக் கண்டு, 'ஏன் இவ்வாறு குழந்தைகளைக் கொணர்ந்தீர்கள்' எனக் கேட்க, பிராட்டிமார் 'கண்ணு! உலகத்தரால் புவன சுந்தரன் என்று போற்றப்படும், உன்னைக் காண ஆவல் கொண்டு உம்மை இங்கு வரவழைக்க இம்மாதிரிசெய்தோம்' என்று கூறினர்.

ஸ்ரீகண்ணபிரான் 'பூவுலகில் எனக்கு இன்னும் பல வேலைகள் உள்ளன. என் அவதார காரியம் முடியவில்லை. நான பூமியில் கலியுகம் பிறக்கு முன் இங்கு வருகிறேன்' என்று ஆறுதல் கூறி அந்தணர் குழந்தைகளை எடுத்துக் கொண்டு வைகுந்த வாசலில் வந்து வேதியனையும், விஜயனையும தேரில் ஏற்றிக் கொண்டு துவாரகை எழுந்தருளி அக்குழந்தைகள் நால்வரையும், தாயிடம் கூட்டினுர். மிடியன் புதையல் கிடைத்தது போலவும், குருடன் கண் பெற்றது போலவும், பெற்ருேர் மிகவும் சந்தோஷித்து கண்ணனை வணங்கி வழிபட்டு பலவாறு வாழ்த்தினர்.

வி. கே. ஸ்ரீநிவாஸராகவாச்சாரி,
சென்னை - 45

பெரியாழ்வார் இந்த நிகழ்ச்சியை செங்கீரைப் பருவம் என்ற பகுதியில் கீழ்க்கண்ட பாசுரத்தில் அருளிச் செய்கிருர்.

தபபின பிள்ளைகளைத் தன் மிக சோதி
புகத்
தனி ஒரு தேர் கடவித் தாயோடு
கூட்டிய என
அப்ப! எனக்கு ஒருகால் ஆடுக செங்
கீரை
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே

*(முதலாயிரம் 1—5, 7.*
*பெரியாழ்வார் திருமொழி)*

பிறப்பு அகத்தே மாண்டு ஒழிந்த
பிள்ளைகளை நால்வரையும்
இறைப்பொழுதில் கொணர்ந்து
கொடுத்து
ஒருப்படுத்த உறைப்பவன் ஊர்
திருவரஙகம் என்பதுவே.

*பெரியாழ்வார் திருமொழி 4.7.2.*

*இது விஷயமாக நம்மாழ்வார் பாடியது:*

இடர் இன்றியே, ஒரு நாள் ஒருபோழதில
எல்லா
உலகும் கழிய,
படர் புகழ்ப் பார்த்தனும் வைதிகனும்
உடன் ஏற,
திண்தேர் கடவி,
சுடர் ஒளியாய் நின்ற தன்னுடைச்
சோதியில்
வைதிகன் பிள்ளைகளை
உடலோடும் கொண்டு கொடுத்தவனைப்
பற்றி,
ஒன்றும் துயர் இலனே.

*(திருவாய்மொழி 3-10-15)*

*திருமங்கை மன்னன் இது விஷய மாகக் கூறும் பாசுரம்:*

வேத வாய் மொழி அந்தணன் ஒருவன்
எந்தை! நின் சரண்: என்னுடைய
மனைவி
காதல் மக்களைப் பயத்தலும் காணுள
கடியது ஓர் தெய்வம் கொணடு
ஒளிக்கும் என்று அழைப்ப,
ஏதலார் முன்னே, இன் அருள் அவற்குச்
செய்து உன் மக்கள் மற்று இவர்
என்று கொடுத்தாய்-
ஆதலால் வந்து உன் அடியினை அடைந்
தேன்
அணி பொழில் திருவரங்கத்
தம்மானே!

*(பெரிய திருமொழி 5-8-8)*



தொடர் கட்டுரை:

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி

சீதை தற்கொலை செய்து கொள்ளும் நிலையில், மேலும் கம்பர் வால்மீகியின் கருத்தைப் பின்பற்றுகிறார்.

"ஆதலா னிறத்தலே யறத்தினுறெனச்
சாதல் காப் பவருமென் றவத்திற்
சாம்பினர்
ஈதலா திடமும்வே றில்லையென்றொரு
போதுலா மாதவிப் பொதும்ப
ரெய்தினள்"

சீதை தன்னைப்பற்றி பலவாறாக நொந்து கொண்டு உயிரை மாய்த்துக் கொள்வதற்கு மாதவி (குருக்கத்தி) புதரையடைந்தாள் என்று. புதரின் நடுவில் மரம் இருக்கக் கூடுமல்லவா? அத்துடன், புதருக்குள் சென்று விட்டால் தன் நிலை யாருக்கும் தெரியாமல் இருக்கட்டும் என்று எண்ணினள் போலும். ஆகையால் கம்பர் புதர் என்று கூறுகிறார்.
வால்மீகி கூறுகிறார்.

सा जीवितं क्षिप्रमहं त्यजेयं विषेण शस्त्रेण
शितेन वापि
विषस्य दाता न हि मेऽस्ति कश्चित्
शास्त्रस्य वा वेश्मनि राक्षसस्य

"நான் விரைவில் இறக்க வேண்டுமென்றால் என் உயிரை விஷத்தாலே, கூர்மையான ஆயுதத்தாலே, போக்கிக் கொள்ள வேண்டும். இந்த அரக்கர்களின் வீட்டில் இவையெல்லாம் கிடைப்பது அரிது. விஷம் கொடுப்பவர்கள் கூட கிடையாது" என்று. இந்தக் கருத்தை துளசிதாஸரும் கூறுகிறார். ஆனால் சிற்சில கற்பனைகள் செய்துள்ளார்.

आनिकाढ रचु चिता बनाई ।
मातु अनल पुनि देहि लगाई ॥
सत्य कर हि मम प्रीति सगानी ।
सुनै को श्रवन सूल सम बानी ॥

சீதை கூறுகிறாள் 'ஹே திரிஜடையே சுள்ளிகளையும், கட்டைகளையும் கொண்டு வா. அதில் நெருப்பிட்டு உயிரை விடுகிறேன். இனி இம்மாதிரியான வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு உயிர் வாழ முடியாது" என்று. இவ்வார்த்தைகளைக் கேட்ட திரிஜடை "சீதை! நீ இராமனின் பெருமைகளை அறியாதவளா? ஏன்? கவலைப் படுகிறாய்! இராமன் கட்டாயம் வருவான். இந்த இரவு வேளையில் நெருப்பு எங்குக கிடைக்கும்!" என்று சமாதானம் கூறி வீட்டிற்குச் சென்று விட்டாள்.

சீதையின் நிலையை மேலும் கற்பனையாக வர்ணிக்கிறார்.

कह सीता विधिभा प्रतिकूल ।
मिलिहि न पावक मिटिहि न सूला ॥
देखि अत प्रगटगमन अंगारा
अवनि न आवत एकौ तारा ।
पावक मय ससि स्रवत न आगी
मानहुँ मोहि जानि हत भागी ॥

"நான்முகன் எல்லாவிதத்திலும் கெடுதல் செய்து கொணடிருக்கிறான். நான் தற்கொலை செய்து கொள்வோம் எனறால்தீயும் கிடைக்கவில்லை, ஆயுதமும் கிடைக்கவில்லை. ஆகாயத்தில் பிராகாசிக்கும் அக்னி கணங்களாவது கீழே விழக்கூடாதா? அது போனால் போகட்டும். சந்திரன் ஏன் இப்படி தகிக்கிறான். அவனாவது என் துக்கத்தைப் பார்த்து அக்னியை போடக்கூடாதா' என்று சீதை புலம்புகிறாள். இங்கு சீதையின் விரஹத்தை மறைமுகமாக வர்ணிக்கிறார். பின் அசோக மரத்தைப் பார்த்து சீதை கேட்கிறாள்:

सुनहि विनय मम विटप असोका ।
सत्यनाम कुरु हठ मम सोका ॥
नूतन किसलय अनलसमाना ।
देहि अगिनि तन करहि निदना ॥

"ஹே! அசோகமரமே!! என்னுடைய பிரார்த்தனையைக்கேள்! உன்னுடைய பெயர் உண்மையானால் என்னுடைய சோகத்தைப் போக்குவாய். அப்படியில்லை யெனில், உன்னுடைய புதிதான தளிர்கள் அக்னித்துண்டுகள் போல்இருக்கின்றன அவைகளையாவது என்மேல்போடு" என்று. அத்யாத்ம ராமாயணம் கீழ்வருமாறு கூறுகிறது.

उद्बन्धनेन वा मोक्ष्ये शरीरं राघवं विना ।
जीवितेन फलं किं स्यान्मम रक्षोऽधिमध्यत: ॥
दीर्घा वेणी ममात्यर्भं उद्बन्धाय भविष्यति ।
एवं निश्चितबुद्धि तां मारणायाय जानकीम् ॥

"இராமன் இல்லாமல் வாழ்வதைக் காட்டிலும் உயிர் விடுவதே மேல். எனக்கு நீண்ட பின்னல் இருக்கிறது. அதைக்கொணடு தூக்கு போட்டுக் கொள்கிறேன். இனி உயிர் வாழ முடியாது" என்று கூறி மரத்தின் அடியை அடைந்தபோது, ஹனுமான் சீதா பிராட்டியைத் தடுத்து நிறுத்த முயற்சிக்கும்போது ஹனுமன் நினைக்கிறார். "நான் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நான் யார்? எதற்காக வந்திருக்கிறேன் என்பதைக் கூறவேண்டும் மேலும் நான் குரங்காகவே இருந்து பேச ஆரம்பித்தால் நம்பிக்கை ஏற்படாது. அதற்காக நான் ஸம்ஸ்க்ருத மொழியில், அந்தணன் போல் பேசினல் சீதை இராவணன் என்று பயந்து விடுவாள். ஆகையால் நான் மனிதன் போல் சாதாரண பாஷையில் பேசுகிறேன். கோசலை நாட்டில் மக்கள் எவ்விதம் பேசுவார்களோ, அவ்விதம் பேசுவேன்" என்று.

இங்கு கொஞ்சம் கவனிக்கவேணடியது ஒன்று இருக்கிறது. அதாவது இராவணன் அந்தணன் அவன் ஸம்ஸ்க்ருதம்பேசுவான் என்பதைச் சொல்கிறார் வால்மீகி. ஆகையால் தான் அவ்விதம் பேச யோசிக்கிறான் ஹநுமான். ஏனெனில் இராவணன் சீதையுடன் பேசியதைக் கவனித்துள்ளார்.

(தொடரும்)




# கீதை காட்டும் நல்வழி

அத்தியாயம்—11

விசுவ ரூபதர்சன யோகம்

பகுதி — 1

இந்த சிருஷ்டி எங்கும் பல்வேறு உருவங்களில் பகவான் காட்சி தருகிறார். புனிதமான ஆறுகளாயும், உயர்ந்த மலைகளாகவும், ஆழ்ந்த கடலாகவும், பாசமுள்ள பசுவாகவும், பாயும் புலியாகவும், கரிய காக்கையாகவும், இனிய குயிலாகவும், சீறும் பாம்பாகவும், உறுமும் சிங்கமாகவும் ஒளிரும் சூரிய சந்திர நட்சத்திரங்களாகவும்............இன்னும் என்னவெல்லாம் சொல்ல முடியுமோ அத்தனையுமாகவும், இறைவனே வியாபித்திருக்கிறார் என்பது பத்தாம் அத்தியாயமான விபூதியோகத்தின் கருத்து ஆகும்.

இனிய வடிவமும் இறைவனே. இன்னாத தோற்றமும் அவரே. அழகிய தோற்றமும் ஆண்டவனே. அழகற்றதும் அவரே. இனிய வடிவத்திலும அழகிய ரூபத்திலும் ஆணடவனைக் காண விரும்பும் நாம் இனிமையற்ற, அழகற்ற, கொடூர வடிவிலும் ஆண்டவனைக் கண்டு வணஙக நம்மைப் பயிற்றுவித்துக் கொள்ளவேண்டும். அதுவே பக்தியின் உச்ச நிலையாகும்.

முதல் வகுப்பில் உள்ள குழந்தைக்கு ஆசிரியர் மணற்பரப்பின் மீது 'அ', 'ஆ'. 'க', 'ச' என்று எழுத்துகளைப் பெரிய வடிவில் எழுதிக் காட்டுவார். குழந்தையும் பெரிய வடிவத்தில் அந்த எழுத்துக்களைக் கற்றுக் கொள்ளும். பெரிய சுலபமான எழுத்துக்களை முதலில் கற்றுன பிறகு, நுண்ணிய சிக்கலான எழுத்துக்களை குழந்தைக்கு ஆசிரியர் கற்பிப்பார். அவற்றைக் கற்பது சிரமம் என்பதனுல் அவற்றைக் கல்லாது விட்டு விடலாகாது. அதுபோல தீயோரிடம் உள்ள பகவானைப் பார்க்கவும் நாம் கற்றுக் கொள்ளவேண்டும். பசுவைத் தெய்வமாக வணங்க முற்படும் நம்மவருக்குப் புலியை அநத இடத்தில் வைத்து வணங்குவது சற்று கடினம் தான். ஆனுல் அவ்விதம் செய்யாதவரது பக்தி அரைகுறை பக்தியே என்பது கிருபாசாரியரும் கணையவின சருந்து

ஸ்ரீராமனை நாம் எந்த அளவிற்குப் புரிந்துகொண்டிருக்கின்றோமோ, அநத அளவுக்கு இராவணனையும் நாம் புரிந்து கொளள வேண்டும. பிரஹ்லாதனை நாம புரிந்து கொள்ளும் அளவுக்கு ஹிரண்ய கசிபுவையும் புரிந்துகொள்ள வேண்டும். வேதததில் பகவானைப் பற்றிய ஒரு அழகிய விளக்கம வருகிறது;

नमो नमः स्तेनाना पतये नमो नमः।
नमः पुजिष्टेभ्यो नमो विषादेभ्य ॥

''அந்தத் திருடர் தலைவருக்கு நமஸ்காரம். அநதக கொடியவர்களுக்கு, அந்த இம்சை புரிவோருக்கு நமஸ்காரம்''.

இந்த சுலோகத்தின் பொருள் என்ன? நல்லவர் கெட்டவர் அனைவரும அடிப்படையில் பகவத் சொரூபமேயன்றி வேறல்ல எனபதாகும். இதிலிருந்து உலகைப் பற்றிய முக்கியமான ஒரு கருத்து நமக்குத் தெரிய வருகிறது. நல்லது கெட்டது இரண்டும் கலந்ததே இவ்வுலகம். எதிலும் எங்கும் எவரிடத்தும் நல்லதைக்காண

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

நாமகற்றுக்கொள்ளவேண்டும் மகான்களின் சரித்திரம் நமக்குப் புகட்டும் பாடம் இதுவேயாகும். தடி கொண்டு தமமைத் தாக்கிய முரடனையும் பகவத் சொரூபமாகவே கண்டு வணங்கினர், 'இமயஜோதி ஸ்ரீசுவாமி சிவானந்தர்'. தமது கைகளை வெட்டித் தள்ளிய முரடர்களிடத்தும் அன்பு பாராட்டி ஆசி கூறினர் ஜேயதேவர். இந்த அடிப்படையில் தான் ஸ்ரீ துளசிதாசர் இராவணனை ஸ்ரீ ராமனின் 'பகைவனுன பக்தன்' என்று கூறியிருக்கிறர். இராவணனின் பக்தி அனுமாருடைய பக்தியிலிருந்து கொஞ்சம் வேறுபட்டதாகத் தோன்றுகிறது. அவ்வளவு தான். இருவரிடத்தும் பகவான் ஒரே விதமான அன்பையே பொழிகிறர்.

இதை ஒரு எளிய உதாரணத்தினுல் விளக்கலாம். தீ காலில் பட்டால்

# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | ரூ. | பை |
|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனை ... | 1 | 00 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் ... | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| குருபரம்பரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் (தொகுத்தவர்) தேசிகாச்சார்யா) ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (தொகுத்தவர்) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் – தி. தி. தே – ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம் (பொருளுடன்) ,, ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, ... | 0 | 12 |
| செமபொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன்) ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு. டி. பி. பழனியப்பபிள்ளை ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) ... | 4 | 00 |
| திருவாய்மொழி { கே. பாலசுந்தர நாயக்கர் } பாகம் 1 ... | 7 | 50 |
| { விளககவுரையுடன் } பாகம் 2 ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாசசார்யா) ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி. ராமநாத கனபாடிகள் ... | 0 | 20 |
| நித்யாநுஸந்தானம் – தி. தி. தே – ... | 3 | 75 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி. கே. நாராயணன்) (அச்சில்) ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி தி. தே - ... | 8 | 00 |
| சித்திர திருப்பாவை (வண்ணப் படங்களுடன்) தி. தி. தே- ... | 8 | 25 |

## விற்பனைச் சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாஙகுவோர்க்கு, 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்துவாங்கினுல் 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டு விளங்கும் விற்பனைக்கு 12½%, ரூ. 500/- லிருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைக்கு 20%, ரூ. 1000/-க்கு மேல இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளஙகினுல், அவற்றிற்கான தபால் செலவினை தி. தி. தேஸ்வதானம் ஏற்கும்.

ஆசிரியர்,
தி. தி. தேவஸ்தானம்
(தி. தி. தே. பிரஸ் காமபௌணடு) திருப்பதி.

கால் வீங்கிப் போய்விடுகிறது. காலி, கொபபுளம் உண்டாகி விடுகிறது. ஆனுல் காலில் ஏற்படும் வீக்கத்திற்கு சூடான ஒத்தடம் கொடுத்தால் அநத வீக்கம அமுங்கி விடுகிறது. இரண்டிலு'முள்ளது ஒரே தீ அல்லது உஷ்ணம். ஆனுல் ஒன்று துன்பம் தருகிறது. மற்றது அதைப் போக்குகிறது. எனவே அவை செயலபடும் விதம் தான் மாறுபடுகிறது. அதுபோல ஸ்ரீராமரிடம் அனுமன் காட்டியது நேசபக்தி. இராவணன் காட்டியதோ வெறுப்பு பக்தி. அவ்வளவுதான் வித்தியாசம். தன்னை அடிக்கும் ஒரு குழநதையையும், அணைக்கும் இன்னெரு குழந்தையையும் தாய் ஒருதநி ஒன்று போலவே நேசிப்பது போல, பகவான் தம்மை வைதாரையும், வாழ்த்துவோரையும் ஒரே விததநில் ஆட்கொணடு அருளுகிருர். வசவு வாழ்த்து என்பதெல்லாம் நமது திருஷ்டியில் தானே ஒழிய ஆண்டவனது அருட்பார்வையில் அல்ல என்பதை நாம் நினைவில கொள்ளவேணடும. இராமனும் பரம்பொருளே, இராவணனும் பரம்பொருளே. கிருஷ்ணனும் பிரம்மமே. கம்ஸனும் பிரம்மமே. பரம்பொருள் ஒன்றே. அது பலவாறு கத் தோற்றம் தருகிறது. இதுவே கீதா சாரமாகும். ஏன்? ஹிந்து மதத்தின் அடிப்படைக் கருத்தும் இது தான்.

முதலில ஸ்தூலத்திலும், பின்னர் சூக்ஷமததிலும், ஆரம்பததில எளிமையிலும், பின்னர் சிக்கலிலும, முதலில இனியதிலும் பின்னா இனனுதவற்றிலும் ஆக அனைததிலும இறைவனை நாம் கணடு தரிசிப்பதன் மூலம் அகிலமனைத்தும் அவனே என்ற எண்ணம நமமில நிலைபெற வேண்டும்.

பத்தாம் அத்தியாயத்தில அண்டமெங்கும் பகவான எவ்வாறு வியாபித்து நிற்கிருர் எனபதை அர்ஜுனன் அவரே சொல்லக் காதால் கேட்டான். 'ஆ! எம்பெருமானது மகிமை இத்தகையதா! உலகம் முழுவதும் அவர் ஒருவரா வியாபிதது நிற்கிருர்' என்

பரந்த அறிந்து அவன் மிகவும் வியப் படைந்தான். இப்பொழுது அதத கைய ஒப்பற்ற மகிமை வாய்ந்த அவ ரது தோற்றத்தைக் கண்ணுல் பார்க்க விரும்புகிறுன். அது தான் பகவானது விசுவரூபக் காட்சி.

தமது விபூதிகளையெல்லாம், அதா வது மகிமைகளையெல்லாம் விஸ்தார மாகப் பகவான் சென்ற அத்தியாயத் தில் எடுத்துரைத்தாரல்லவா? அதை மிகுந்த ஆர்வத்துடனும், பக்தியுட னும அர்ஜுனன்கேட்டான். அதனுல் அவனிடம் ஏற்பட்ட மாற்றம் என்ன என்பதை அவனே கூறுகிறுன்.

**மதனுக்ரஹாய பரமம்**
**குஹ்ய மத்யாத்ம ஸம்ஞிதம்|**
**யத்வயோகதம் வசஸ்தேன**
**மோஹோऽயம் விகதோ மம||**

*(அத் 11 சுலோகம் 1)*

''என்னைக் காக்க வேண்டி உம்மால் மொழியப்பட்ட உயர்ந்ததும மறை பொருளுமாகிய ஆத்மதத்துவததைப் பற்றிய வார்த்தைகளால் எனது மயக்கம் ஒழிந்தது''

அர்ஜுனன் அவனது கடமையாகிய அறப் போரைச் செய்ய மறுத்தது, உற்றுர் உறவினர் மீது தகாத இடத் தில் தகாத சூழ்நிலையில் அவனுக்குத் திடீர் என்று ஏற்பட்ட பாசத்தின் காரணமாகவேயாம். அந்தப் பாசம் ஏன் தோன்றிற்று? மோகம் அல்லது மயக்கத்தால். இதை ஒரு உவமானத் தால விளக்கலாம் பகல் வேளை சூரி யன் நன்கு பிரகாசித்துக் கொணடிருக கிறுன் அந்த வேளையில் திடீரென்று ஒளி குறைந்து இருள் படருகிறது. ஏன்? எங்கிருந்தோ வந்த மேகப்பட லம் ஒன்று சூரியனை மறைத்து விடுகி றது. அதுபோல அர்ஜுனனது நல்ல றிவை 'பந்துக்கள் மேல் அவனது பாசம்' எனும் மோகமானது மறைத்து விடுகிறது. அந்த மோகம் அல்லது மயக்கத்தின் காரணமாக அவன் தன் னைப் பற்றியும், உலகைப் பற்றியும், அவனது கடமை மற்றும் உலகத்திற் கும் அவனுக்குமுள்ள தொடர்பைப் பற்றியும் எப்படியெல்லாமோ எண் ணம் கொண்டிருந்தான்.

மேகம் சூரியனை மறைக்கிறது. மோகம் அறிவை மறைக்கிறது. சூரி யனை மேகம் மறைப்பதால் உலகில் இருள் பரவுகிறது. அறிவை மோகம் மறைப்பதால் மனதில் அறியாமை இருள் சூழ்கிறது. காற்று அடிப்பதால் மேகம் அகலும். சூரியன் பிரகாசிப் பான். ஞானம எனும் காற்று அடிப்ப தால் மோகம் எனும மேகம் அகலும். மனத்தில் அறிவு பிரகாசிக்கும்.

அர்ஜுனன கூறுகிறுன்:

''கண்ணு! என் மீது நீர காட்டும அன்பின் காரணமாக இந்தப் பேர றிவை எனக்குப் புகட்டினீர். இது எத்தகையது? மிகவும் மேலானது அதி ரகசியமானது. ஆதம அனுத்ம விவேகத்தை உண்டு பண்ணுவது. உமது திருவாக்கினுல் என்னை இது காறும் கவ்வியிருந்த மோகம் இப் பொழுது என்னை விட்டு அகன்று விட் டது. எப்பேர்ப்பட்ட தயாளு நீர்''

'எல்லாம் நானே, எங்கும் நானே' என்று பகவான் கூறக் கேட்டதும் அர்ஜுனனுக்கும பகவானது அந்த விசுவரூபத்தைத் தரிசிக்க வேண்டும் எனற ஆர்வம் ஏற்பட்டது. அந்த ஆர்வம் அவனிடம் எழுந்தது இயற் கையே ஆனுல் விசுவரூப தர்சனத் தைப் பெறுவதென்பது இறுதி இலட் சியமாகி விடாது. அப்படியாயின் கண்ணனின் அமுதமொழியான கீதை இந்த விசுவரூப தர்சனத்துடன் நிறைவு பெற்றிருக்கவேண்டும். ஆனுல் கீதை மேலும் தொடர்கிறது.

அது மட்டுமல்ல, பகவானது விசுவ ரூபத்தைப் பார்க்க வேணடும என்று விரும்பிய அர்ஜுனன் அதற்குத் தான தகுதியுடையவன் தானு, விசுவரூபத் தைத் தரிசிப்பதற்கான தகுதிகள் தன் னிடம் இருக்கின்றனவா எனபது பற்றியெல்லாம் சிந்திக்கவில்லை. அதனுல் என்ன நிகழ்ந்தது? பகவான தமது விசுவரூபத்தை அவனுக்குக் காட்டியவுடன், அர்ஜுனன் ஒரேயடி யாகப் பயந்து விட்டான. ''கண்ணு! போதும் போதும் இந்தப் பயங்கரக் காட்சி. நீ மீண்டும் அந்தக் குழலூ தும் கண்ணனுகவே, மாடு மேய்க்கும் கண்ணனுகவே, வெணணெயுணணும் கணணனுகவே, தேரோட்டும் கண்ண னுகவே, எனக்குக் காட்சி யளிப் பாயாக'', என்று கணணனிடம் வேண்டிக் கொணடான.

'எனது மகிமைகளை நான் உனக்குச் சுருக்கமாக எடுத்துரைத்தேன்', என் [illegible] கவா[illegible] [illegible] முடிவற்ற மகி[illegible] நான் விஸ்தார மாகவே [illegible] கேட்டேன்'', என்கிறுன் அர்ஜுனன். இ[illegible]டைய [illegible] [illegible]ரும் [illegible] பு[illegible] புருஷனைப் போகத் தோன்றும் ஆம் அவரவர் நோக்கில் அவரவர் சரி.

எல்லையற்ற பரம்பொருளின் மேன் மையையும் மகிமையையும வார்த்தை களினுல் எப்படி விளக்குவது? முடியாதுதான். இருந்தாலும் அர் ஜுனன மீது உள்ள அன்பின் காரண மாகப் பகவான அதைச் சுருக்கமாகச் சொன்னுர். ஸாவகநுனை பகவா னுக்கு அவர் கூறியது மிகமிகச் சுருக கமே. ஆனுல் அர்ஜுனனது நிலை அதற்கு முற்றிலும் மாறுபட்டது. அறியாமை என்ற மேகம் அவனை விட்டு இன்னும் நீங்கிய பாடில்லை. எனவே ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட் பட்ட அவனது சிற்றறிவுக்கு பகவா னது சுருக்கமான விளககம் மிகவும் விஸ்தாரமானதாகத் தோனறுகிறது. எனவே தான் 'சுரோதௌ, விஸ்தரசோ மயா' (என்னுல் விரிவாகக் கேட்கப் பட்டது) என்று அவன் கூறுகிறுன்.

வயது வந்த வாலிபன் ஒருவன் எப் பேர்ப்பட்ட உணவையும் பெரிய பெரிய உருண்டைகளாக உருட்டி வாயில் திணித்து வெகு சீக்கிரத்தில தின்று தீர்த்துவிடுகிறுன். ஆனுல் சிறு குழந்தையின் நிலை என்ன? தட் டில் உள்ள பிசைந்த சாதமோ மிகவும் கொஞ்சம். அதையும் அதனது தாய சிறுசிறு உருண்டைகளாக உருட்டி அதனது வாயில் திணிக்க வேணடியிருக்கிறது. வாயில் திணித்த உணவைஉண்ணுது குழந்தை வெளியே துப்புகிறது. அந்த உணவையும் தாய் எப்படி ஊட்டுகிறுள்? வீட்டின் முற்றத்திற்கு குழந்தையை எடுத்துச் சென்று காக்கை, குருவியை வேடிக் கைக காட்டுகிறுள். 'இதோ காக் காய்க்கு ஒரு வாய் உனக்கு ஒரு வாய். ஆ காட்டு'', என்கிறுள். ஒரு உருண் டைச் சாதம் உள்ளே போவதற்கு ஒரு மணி நேரம் ஆகிறது. தாயாரின் நோக்கில் அந்த சாதத்தின் அளவு மிகக் குறைந்தது. குழந்தையின் நோக்கில் அது மிக அதிகம். அது போலவே பகவான் 'சுருக்கமாக' என்பதை அர்ஜுனன் 'விரிவாக' எனக் கொள்கிறுன்.

**(தொடரும்)**

(16-ம பக்கத் தொடர்ச்சி)

இப்படி ஒரு கனவுக் காட்சி!

அடியார்கள்தாம் ஐயனின் தாள் பற்றுவர். இங்கோ, எம்பெருமான் அடியவளின் காலைப் பற்றுகிறார். கண்ணபெருமானுக்குத் தம் பக்தர்கள் பால் அத்தகைய பாசம்; வாத்சல்யம் உண்டு!

இது மாதிரியான கனவுக் கண்டாலேயே போதுமே! வேறு என்ன தரிசனம் வேண்டும்?

கடவுளின் தோற்றத்தைத்தான் கண்டு கொள்ள வேண்டுமா? கடவுட் கோட்பாட்டினை, இறைத் தத்துவத்தை கூடக் கண்டு கொள்ளலாம். எம்பெருமானின் திருநாமம் இறைவனை விடவே உயரியது என்பர் பெரியோர். கடலைக்கடக்கக்கல்லைப்போட்டு மண்ணைநிரப்பிக் கஷ்டம அத்தனையும் பட்டாராம் இராமபிரான். ஆனால் கணநேரத்தில கடந்து சென்றாராம் அனுமன். காரணம் அவர் நெஞ்சத்தே கோயில் கொண்டிருந்த இராம நாமத்தின் மகிமை என்பதாகப் பரமஹம்ச இராமகிருஷ்ணர் மொழிவார்.

திருமங்கை மன்னன் ஊர் ஊராய்ச் சென்று திவ்விய தேசங்கள் பலவற்றிலும் எம்பெருமானைச் சேவித்தவர். அவர் இறைவனிடமே வழிப்பறி செய்யப் போந்து, பகவானாலேயே மந்திர உபதேசம செய்யப் பெற்றார். ஞானம் வந்தவுடன, அவர் முதலிற் பாடிய திருப்பாசுரம் பெரிய திருமொழியில் உள்ளது. வாடினேன் வாடி வருந்தினேன் எனத் தொடங்கும் பாசுரம், ஓர் ஆறு பாட்டின் இறுதியிலும்,

**நான் கண்டு கொண்டேன்**
**நாராயணா வெனனும் நாமம**

என்று பேசும்!

**எம்பிரான் எந்தை எனனுடைச் சுறறம**
**எனக் கரசு என்னுடை வாணாள்**
**அம்பினால் அரககர் வெருக்கொள நெருக்கி**
**அவர்உயிர் செருத்த எம்அண்ணல்**
**வம்புலாம் சோலை மாமதிள தஞ்சை**
**மாமணிக் கோயிலே வணங்கி**
**நம்பிகாள்! உயய நான கண்டு கொண்டேன்**
**நாராயணா வென்னும் நாமம.**

அம்பு தொடுத்து அரக்கர் குலம் அழியச் செய்த எம்பிரானின் திருநாமம் சொல்லி, நாம் உய்யலாம் எனக்கண்டு கொண்டேன். பகவானைத் தம் தலைவரெனறும் தந்தையென்றும் உறவினர் என்றும் பாவித்துப் பக்தி செய்யும் அடியவரை நம்பிகாள் என்று விளித்துத் திருமங்கை யாழ்வார் இவ்வாறு கூறுகிறார். தம்மை ஆண்டு, தம் வாழ்வின் அனைத்துமாய் உள்ள ஈசனை, நீங்கள் தேன் சிந்தும் சோலைகள், மாமதிள்கள் சூழ்ந்த தஞ்சை மாமணிக் கோயிலை வழிபட்டு அங்கே தொழுது சேவிக்கிறீர்கள். அந்த ஈசனின் அஷ்டாட்சரத் திருநாமத்தின் மகிமையை நான இன்று தான் கண்டு கொண்டேன். நலம் தரும் சொல் அது!

குலசேகரர் அடியவருள் சிறந்தவர். படியாய்க் கிடந்து உன் பவளவாய் காணபேனே என்று பாடிய பரம பக்தர். அவரும இறைவனைக் கணணால் கண்டவருள ஒருவர் ஆவார்.

**அளிமலர்மேல் அயன்அரன் இந்திரனோடு எனை**
**அமராகள் தம் குழுவும அரம்பையரும் மற்றும**
**தெளிமதிசோ முனிவர்கள் தம் குழுவு முந்தித்**
**திசைதிசையில மலாதூவிச் சென்று சேரும்**
**களிமலர்சேர் பொழில அரங்கத்(து) உரகமேறிக்**
**கண்வளரும கடலவண்ணா கமலக் கண்ணும்**
**ஒளிமதிசேர் திருமுகமும் கண்டு கொணடேன**
**உளளமிக எனறு கொலோ உருகும நாளே!**

குலசேகரர் திருவரங்கத்தில் பாம்பின் மிசை பள்ளிகொணட பரமபத நாதனைத் தரிசித்தாயிற்று. பிரமன், ருத்திரன், இநதிராதி தேவர், ஞானியர் திருக்கூட்டம ஆகிய அனைவரும் எண திசையினின்றும் மலர் தூவி வணங்கி வழிபடும் அரங்கத்தம்மானின் தாமரை நயனங்களையும் சுடர்த்திருமுக மண்டலத்தையும் ஆழ்வார் கண்டுகொண்டார். கணடபின் அப்படியே சிலையென, ஜடம்போல நின்றுவிட்டோமே எனப் பரிதவிப்பு அவர்க்கு. மறுகணம் அப்படியே கரைந்து உருகிப் போயிருக்க வேண்டாவோ? இவ்வாறு ஆகவில்லையே என்று அவர்ககு அங்கலாய்ப்பு! அது போகட்டும்; அவர் கவலை யது!

நம்மைப் பொறுத்த மட்டில், எம்பிரானைக் கண்டு சேவித்தவர் அவர். எனவே கண்டுகொண்டேன் என்பார்.

இதுவரை நாம் ஈசன் அடியார்கள் சிலர் தம் பாடல்களில் தாம் தெய்வக் காட்சிப் பெற்றமையினைப் பாடக் கேட்டோம். இவை யாவும் நம் போன்றோர்க்காக அவர்கள் பாடியவை என்ன தான் கை கூப்பிக் கும்பிட்டுச் சேவித்தாலும், உள்ளூரக் கடவுளைக் காண்கிற உணர்வோ உறுதியோ இல்லாதவர் பலர். எனவே ஞானிகள் ஆகிய அவர்கள் தாம் கண்டதை நமக்குச் சொல்வார் ஆயினர்.

அவர்கள நேரிற் கணடவர்கள். eye witness வேண்டும் எனக்கேட்பவர்களின் திருப்திக்காக, அவர்கள் தாம் கண்டதை கணட வண்ணமே கூறியுள்ளார்கள். அவர்கள் கணடதைச் சொனனார்கள. நாம் அவர்கள் சொன்னதைக் கேட்டோம். கடவுள் காணாதவர் கதைக்கும் கட்டுரையல்ல; கவிஞரின் கற்பனையல்ல என்ற மெய்யறிவு நமக்கு எழத்தான், அவர்கள் இவ்வளவு பாடியதும்.

கண்டறியாதன கணடேன் என்பர். கண்ணாரக் கண்டேன் நானே என்பர். கண்டேன் கமல மலர்ப்பாதம் என்பார் ஒருவா தில்லையில. ஒருவர் கண்டால், கண்ண மங்கையுள் இன்னொருவர் காணபார். இவர் மூவிலை வேல் கைக் கணடேன் என்பார், அவர் புரி சங்கம் கைக்கண்டேன் என்பார். இத்தனையும் விடுத்து, கணடு கொண்டேன் நாராயணா எனும் நாமம் என்பார் வேறொருவர். இவ்வாறாக எம்பெருமானைத் தம் கணகளினால் கண்டவர்களுடன் நாம் நேரில் கண்ட பேட்டி இக்கட்டுரை!



(தொடர் கட்டுரை)

# சிறையிருந்த செல்வி



## கற்பின் செல்வி

நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் கற்புத் திறனை இளங்கோ அடிகள் வெளிப்படுத்தும் போக்கு தனித்தன்மை வாய்ந்ததாகும். கோவலனை நமக்கு அறிமுகப் படுத்தும்போது,

"மண்தேய்த்த புகழினான் மதிமுக
மடவார்தம்
பண்தேய்த்த மொழியினர் ஆயத்துப்
பாராட்டிக்
கண்டேத்தும் செவ்வேளென் றிசைப்
போக்கிக் காதலாள்
கொண்டேத்தும் கிழமையான்
கோவலன் என்பான்மன்னோ"

(சிலம்பு. மங்கல வாழ்த்துக்
காதை. 36-39)

என்று கூறும் இளங்கோ அடிகள், அதற்கு முன்னா கண்ணகியை அறிமுகப் படுத்தும்போது கூறுவதென்ன?

"போதிலார் திருவினாள் புகழுடை வடி
வென்றும்
தீதிலா வடமீனின் திறமிவள் திற
மென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய
பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னுங் கண்ணகி
யென்பாள்மன்னோ"

(சிலம்பு, மங்கல வாழ்த்துக்
காதை. 26-29)

என்ற அவர் சொற்கள் எண்ணிப் பார்த்தற்குரியது. கோவலனைப் பெண்கள் 'செவ்வேள் என்றிசைப் போக்கி காதலாள் கொண்டேத்' தியதைப் போல கண்ணகியைப் 'போதிலார் திருவினாள்' என்று ஆண்கள் புகழ்ந்ததாக இளங்கோ ஏன் அமைக்கவில்லை? ஒரு பெண்ணின் அழகைப் பிறஆடவன் வாய்மொழியால் புகழ வைப்பது அந்தப் பெண்ணின் கற்புத் தன்மைக்கு மாசு கற்பிப்பது போன்றதாகும். ஆகவேதான் இளங்கோ அடிகள் கண்ணகியின் தன்மைகளை, அழகைப் பெணகளின் வாய் மொழியாலேயே புகழ்கிறார்.

திரு. என். கிருபானந்தன்,
M.A., BSc, Jr. Dip-in-Ling,
திருப்பதி

இதே போன்ற தன்மையைக் கம்ப ராமாயணத்திலும் நாம் காணலாம். தசரதன், அவரது மூன்று மனைவிகள், உறவினர்கள் ஊரார், முதலிய அனைவரும் மிதிலையை வந்தடைந்த பின்னர், சனகன் சீதைக்கு அணிகலன்களைப் பூட்டி அழகுக்கு அழகு செய்து, அழைத்து வருமாறு பணிக்கிறான். தான் துங்கமணி மாடத்திலே கண்டு காதல் கொண்ட அழகன்தான் வில்லை ஒடித்த இராமனாக இருக்க வேண்டும் என்று ஒருவாறு தோழியின் கூற்று மூலம் உறுதி கொண்டாலும், சற்று ஐயத்துடனும், மகிழ்ச்சியோடு கூடிய நாணத்துடனும் சீதை அழகு தேவதை




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

## ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸவர சுவாமி கோயில் | ஸ்ரீ சநதரமௌளீ-ஸ்வர சுவாமி கோயில |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட ஒனறு | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) டிக்கெட் ஒனறு | | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) டிக்கெட் ஒன்று | | 0-25 | 0-25 |

| நைவேத்தியஙகள் | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு ' ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

யாக, செங்கமலச் செல்வியாகத் தன் தோழிகளுடன்,

' இந்துவின் கொழுந்து விண்மீ
னினததொடும வருவ தெனன''

நடந்து அரசவையை அடைகிருள். அவளைக் கண்ட வசிட்ட முனிவரும், விசுவாமித்திர முனியும், 'திருமாலின் அவதாரமான இராமபிரானுக்கு உரிய இலக்குமியின் திருஅவதாரம தான் இந்தச் சீதை' என்று உணர்ந்து மகிழவும், தசரதன் 'பெறற்கரிய செல்வம் பெற்றனன்' என அகங்குளிரவும், இராமன், தான் முன்பு கன்னி மாடத்தில் கண்டு காதல் கொண்ட கன்னி தான இந்தச் சீதை என்று அறிந்து மகிழ்ச்சிக் கடலில் மூழ்கவும், கூடியிருந்த ஆணகளும் பெண்களுமாகிய மற்றவர்கள் செய்வதெனன?

அவளைக் கண்ட மற்றவர்கள் அவளை ஒரு தெய்வமாகவே காணுகின்றனர். அவர்கள் மனமும், அந்தக்கரணங்களும் எல்லாம அவள்மீது பக்திப் பரவசம் கொள்ள, அவர்களது கைகள், அவர்களுக்கும் தெரியாமல் தலைமீது சென்று குவிகின்றன. இதனையே கம்பன்,

' கைகடலை புககன கருத்துளதுமெல்
லாம்
தெய்வமென வுற்றவுடல சிநதைவச
மனரோ?'

(கம்ப. பால. கோலங் காண். படலம். 34)

என்று இனிது உரைப்பான். இங்கும் நாம் கவனிக்கத் தக்கது ஒன்று உள்ளது. இராமபிரானைக் கண்ட மிதிலை நகரத்துப் பெணகள் கொண்ட காதலையும், விரக தாபத்தையும், அவர்களது நிலையையும் ஏறக்குறைய நாற்பது பாடலுக்குமேல் (உலாவிரு படலம். 1-41) பலவாறு பாடிச் செல்லும் கம்பன், சூர்ப்பணகை, முதலான ஒரு சில பெண்களின் வாய்மொழி மூலம் இராமனின் அழகைப் பாடுகிருர். ஆனல் சீதையின் அழகைக் கண்டு மிதிலை நகரத்து ஆண்களோ, தசரதனுடன் வந்த ஆண் மக்களோ காதல் கொண்டோ, காமமுற்ரோ வாடியதாக குறிப்பில்லை. காவியத்தில் இராமபிரான் வாய்மொழி மூலமன்றி வேறு ஆடவர் மூலமாகச் சீதையின் அழகை அவர் பாடாதது

கவனிககத் தக்கது (இராவணன் சீதையினை காம நோக்கத்துடன், அவளது அழகைப் புகழ்ந்ததாக வருவது முன்பே குறிப்பிட்டது போல தவிர்க்க முடியாத தாகையால் அதற்கு மட்டும் விலக்கு அளிக்க வேண்டியுள்ளது.) ஆக இங்கும சீதையைக் கண்ட மற்ற மாந்தர்களின் மனதில், சீதையின் அழகு எந்தக் காம உணர்ச்சியையும் எழுப்பாது, மாறாக பக்தியையே உண்டு பண்ணியதாக, அவர்கள் அவளை ஒரு மானிடப் பெண்ணாக, அழகியாக காணவில்லை, ஒரு தெய்வமாகவே கண்டனர் என்று. கம்பன் அமைத்துச் செல்வது கவனிக்கத்தக்கதாகும். சீதையின் கற்பை நன்கு வெளிப்படுத்த வேண்டும் என்று துடிக்கும் கம்பனின் இதயத் துடிப்புகளில் இதுவும் ஒன்று.

கற்புக்கரசிகளின் பெருமைக்கும், ஆற்றலுக்கும் எல்லையேயில்லை. அவர்கள், தமது கற்பின் திண்மையால், திறத்தால், செயற்கரிய செயல்களையும் செய்யும் ஆற்றலைப் பெற்று விடுகின்றனர். அவர்கள் நினைத்தால் இந்த ஐம்பூதங்களையும் தங்கள் சொற்படி இயக்க முடியும். இதனையே திருவள்ளுவரும்,

'' தெய்வம் தொழாஅள் கொழுநற்
றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை '' (55)

என்று வலியுறுத்தியுள்ளார். கைப்பிடித்த கணவனையே கண்கண்ட கடவுளாகக் கொண்ட கற்புக்கரசிகள் பெய்யென்று ஆணையிட்டால், ஒரு சொல் கூறினால், மழையும் உடனே பெய்யுமாம். ஒரு கற்புக்கரசி கதிரவனை ஏழு நாட்கள் வரவொட்டாது தடுத்த புராணம் நமக்கு தெரிந்தல்லவா? தன் கற்பினைச் சோதிக்கவந்த மும்மூர்த்திகளையே, தன் கற்புத்திறத்தால் சிறு குழந்தைகளாக செய்து தாலாட்டவில்லையா மற்றொரு கற்புக்கரசி? கணவன் இன்னுயிரை அந்த காலனிடமிருந்தே பறித்து வரவில்லை இன்னொரு கற்புக்காசி? இவ்வாறு பல்வேறு அற்புதங்களைச் செய்த கற்புக்கரசிகளின் வழியே வந்த சீதைககும் அந்த ஆற்றல் இல்லையா? இருந்தால் ஏன் அவள் தன் கற்பு ஆற்றலால், தன் துயரைத் தீர்த்துக்கொண்டு இலங்கையை விட்டு இராமனிடம் செல்லவில்லை? என ஐயம் தோன்றலாம். இதற்குச் சிறையிருந்த செல்வியே பதில் கூறுகிறாள். அனுமனிடம் சீதை 'இந்த இலங்கை மட்டுமல்ல; எல்லையற்ற உலகங்கள் அனைத்தையும் ஒரே ஒரு சொல்லால் சுட்டுப்பொசுக்கி விடுவேன் (என் கற்புக்கு அந்த ஆற்றல் உண்டு) ஆனாலும் அந்தச் செயல் இராமனுடைய வில்லின் ஆற்றலுக்கு மாசைக கற்பிக்கும் என்ற ஒரே காரணத்தால் அந்த எண்ணத்தை என் மனதிலிருந்து அகற்றி விட்டேன்' என்று கூறுகிறாள். அப்பாடல்

'' அலலன் மாக்க ளிலங்கைய தாகுமோ
எலலை நீத்த வுலகங்கள் யாவுமென்
சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசென்று
வீசினேன் ''

(கம்ப. சுந்தர. சூளாமணிப்படலம் 18)

ஆகவே சீதைக்கு, அவள் கற்புக்கு, அந்த ஆற்றல் இல்லை என்று கருதுதல் கூடாது.

கற்புமகள் தன் கணவனுக்கு ஏதாவது தீங்கு ஏற்பட்டாலும், பழி உண்டானாலும், அதனைத் தனக்கு ஏற்பட்ட தீங்காக, பழியாகக் கொள்வாள்; அதனை நீக்க முயலுவாள். தன் கணவனுக்கும் பழியை உண்டாக்கும் எந்தச் செயலையும், தன் உயிர் போனாலும் செய்யாள் உண்மையான கற்புககரசி. தனது கணவனாகிய கோவலனுக்குக் 'கள்வன்' என்ற பழி நிலைக்கக்கூடாது, அந்தப் பழியைப் போக்கவேண்டும் என்ற ஒரே காரணத்திற்காகத்தானேகண்ணகிதன்கணவன் இறந்த பிறகும், தான் உடன் இறந்து படாது அரசன் முன் வழக்காடவும் செய்தாள். இதைப் போலவே சீதையும் அரக்கர்களைப் பொசுக்கி, இராமனிடம் மீளுவதறகான ஆற்றல் இருப்பினும், அச்செயலால, 'மனைவியை மீட்டு வர வன்மையற்றவன் இராமன், அவளே தன்னைக் காப்பாறறிக் கொண்டு மீளுமபடி, முயற்சி செய்யாது கோதண்டத்தை தண்டமாக வைத்திருந்தான் கோதண்டன்' என்னும் மீளாப்பழி தன் கணவனுககு வரககூடாது எனற ஒரே காரணத்தாலேயே இராவணனின் காமச் சுடுச்சொற் சரங்களைத் தாஙகிக்கொண்டு, மாற்றான் மண்ணில் சிறையிருந்தாள் சித்திரச் செல்வி. அதே சமயம் இராமன் தன்னை மீட்க வராமல் போய் விட்டால் என்ன செய்வது என்ற ஐயமும் அவள் மனதில் இல்லாமலில்லை. இராமனுக்காக பத்து மாதங்கள் வரை எதிர்பார்த்து ஏங்கிக் கிடக்கிறாள். கடைசியில் இராமன் பற்றிசெய்திஏதுவும்தெரியாததாலும், இராவணனுடைய வற்புறுத்தல் அதிகமாவதாலும், பொறுமையின் எல்லையைக் கடந்த பொற்செல்வி மனதில் குழப்பம் குடியேறுகிறது. தன்னைக் காப்பாற்றிக் கொண்டு இராமனிடம் தானே செல்ல முடியாதவாறு, அவள் கற்பும், தன் கணவனுக்குப் பழி வரக் கூடாது என்று எண்ணும் அவள் மனமும் தடை செய்கிறது. அதே சமயம் அசோகவனத்தில் சிறையிருக்கவும் முடியாத துயரநிலை. ஆகவே இராமனுக்குப் பழி வராமல் தடுக்கவும், தன் துயரத்திற்கு ஒரு முடிவு கட்டவும் தன் உயிரைப் போக்கிக் கொள்ள முடிவெடுக்கிறாள்சீதைபிராட்டி. தான் தற்கொலை செய்து கொண்டால், இராவணன் எடுத்து வந்த அவமானத்தால் சீதை மாய்த்துக் கொண்டாள்; இராமன் அவளைச் சென்று காப்பாற்ற வழியில்லாமல் செய்து விட்டாள் என்ற செய்தி இராமனுக்குப் பழியை உண்டாக்காது என்று அவள் எண்ணியிருக்க வேண்டும். ஆகவே தன் இன்னுயிரைப் போக்கிக் கொள்ளவும் துணிகிறாளே தவிர, தன் கணவனுக்குப் பழியை உண்டாக்கும் செயலைச் செய்ய சீதை முனைவதில்லை. இதனாலும் நாம் சீதையின் கற்புத் திறனை நன்கு உணரலாம்.

இதைப் போன்ற பல குறிப்புகள் காவியம் முழுவதும், கண்ணகியின் கற்பின் சிறப்பை நாம் தெள்ளென உணர்நதுகொள்ள வழி வகுக்கின்றன. அவற்றையெல்லாம்விரித்துரைத்தால் பெருகும் என்பதால், சீதையின் கற்புத் திண்மையைக் 'குன்றின்மேல் விளககாக' நாம் நன்கு தெளிவாக அறிநது கொள்ள வழிவகுக்கும் ஒரு நிகழ்ச்சியை மட்டும்—அடுத்த இதழில் கூறி 'சிறையிருந்த செல்வி' என்ற இத்தொடர் கட்டுரையின் முதல் பிரிவாகிய 'கற்பின் செல்வி' என்ற பகுதியை முடித்துக் கொள்வோம்.

(தொடரும்)

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

வேலாயுதத்தால் சூரன் உடலினைக் இரு கூருக்கி, அவற்றுள் ஒன்றினை மயில் வாகனமாகவும், மற்ருென்றினைச் சேவற் கொடியாகவும் தன்னுேடு சேர்த்துக் கொண்டான். இதனை விளக்கவே, திருவிழாக்களில் சூர சங்காரம் முடிந்தவுடன் முருகனை மயில் வாகனத்தில் ஏற்றுகின்றனர்கள். அப்பொழுது அவனுக்கு சேவல் கொடியாகிறது.

ஆணவ மலமாகிய சூரனது உடம்பைக் கொன்று, ஆணவ மலம் நீங்கின அநாதி தன்மையுள்ள ஆத்மாவாகிய அவனது உயிரினைத் தன்னுேடு சேர்த் தாட்கொள்ளுகின்ருன் ஆண்டவன் என்பதே தத்துவம்.

## அருள் பெற்ற அடியார்கள்

### குமரகுருபரர்:

குமரகுருபர சுவாமிகள் ஐந்துவயது வரையும் ஊமையாயிருந்து ஐந்தாம் வயதிலேயே திருசெந்தூர் முருகக்கடவுளது திருவருளினுல் கந்தர் கலிவெண பாவை அருளிச் செய்தனர். இக்கலி வெண்பாவை தினந்தோறும் நியமமாக அன்புடன் பாராயணம் பண்ணக் கடவர்கள்.

### குமரகுருபரர் அருளிய நூல்கள்

சகலகலாவல்லி மாலே என்னும் சரஸ்வதி ஸ்தோத்திரம்.

கந்தர் கலிவெண்பா.

முத்து குமாரஸ்வாமி பிள்ளைத் தமிழ் முதலானவைகளாம்.

### பகழிக் கூத்தர்:

இராமநாதபுரத்தைச் சார்ந்த செம்பி நாட்டிலுள்ள சன்னுசிக் கிராமத்திலே ஸ்ரீ வைஷ்ணவராய் பிறந்தார். தந்தையார் தருப்பாதனர். காலம் கி. பி. 17-ம் நூற்ருண்டினராக இருக்கலாமென்பர். இவர் ஒருக்கால் கொடிய வயிற்று நோயால் பெருந்துன்புற்று வருந்திஞர். பல வகையால் மருத்துவம் செய்தும் நோய் நீங்கப் பெருமையால் அவரது அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி திருச்செந்தூர் முருகன் மீது பிள்ளைத் தமிழ் பிரபந்தம் பாடிஞர். அரங்கேற்றி அவனருள் பெற்ருர்.

### பிள்ளைத் தமிழ்:

இது தமிழில் வழங்கும் தொண்ணூற்று வகை பிரபந்தங்களுள் ஒன்று. பாட்டுடைத் தலைவஞகிய குழந்தை முருகனைப் பத்துப் பருவங்களின் நிகழ்ச்சிகளை அமைத்துப்பாடப் படுவது.

### ஆதிசங்கரர்:

ஈஸ்வராம்சமான இவர் இத்தலத்தில் சிறிது காலம் தங்கியிருந்து சுப்பிரமண்ய புஜங்க ஸ்தோத்திரம் பாடியுள்ளார் என்பதான கருத்து அறிய வேண்டியது

### திருச்செந்தூர் மார்க்கம்:

திருநெல்வேலியிலிருந்து 36 மைல் தூரத்தில் வெகு கம்மியமான கடற் கரையில் கடலலைகளைக் கிழக்கு எல்லையாகக் கொண்டு முருகப் பெருமானின் ''விளக்கு வேல்'' கம்பீரமாகக் காட்சி யளித்துக் கொண்டிருக்கும்: ஆலய கோபுரமும், நீண்ட மாபெரும் நடைபாதையும், கிரிபிரதக்ஷிணமும், பெரிய விசாலமான வெளிப்பிராகாரமும்உட் பிராகாரமும் கொண்டதுஇக்கோயில் கிழக்கு நோக்கி ஆண்டவன் அரசு செலுத்திக் கொண்டிருக்கிருன். பஸ், ரயில், போக்குவரத்து உண்டு. மாசி, வைகாசி விசாகம், ஆவணி, ஸ்கந்த ஷஷ்டி ஆகியவை பெருவிழாவாகக் கொண்டாடப்படுகின்றன.

### முடிவுரை

நம்முடைய குறைகளகலவும் வறுமைப் பிடியிலிருந்து விடுபடவும் முருகன் திருக்கோயில்களெல்லாம் சுற்றி பிரார்த்தனை செய்வோமாக. நாம் மெய்யுருகப் பாடி நின்ருல் மலை மேலிருப்பவன் மயில் மேல் வருவான். சோதியும் சுடரும் போன்று, சிவனும் குகனும் ஒன்றேயாகும் எனபது பக்தி குணசீலர்களின் நியமசங்கிரகமுமாம். கருணை முகங்கள் ஓர் ஆறினையுடைய பரஞ்சோதிப் பழம்பொருளை சிவ குமாரன் என்பது துதிப்பொருத்தமேயாகும்.

சுந்தரத்தமிழிலே ''கந்தாவென்றழைப்பார்க்கு கருணைமிக்க காட்டிடுவான்'' என்பது சான்ருேர் வாக்கு. பொன்னுன வாழ்வு தந்து புகழ் தந்து மகிழ்ந்திடுவான்''முருகா''என்றழைப்பவர்க்கு. நலமெல்லாம் தந்தருளும் வேலவனின் கழலினைப் போற்றி கடைத்தேறுவோமாக. (முற்றும்)

# வரம் தரும் வேங்கடவன்

கவிஞர்-புதுவை அமலன்

**பல்லவி**

திருப்பாதம் பணிந்தேன் ஐயா !-எங்கள்
திருப்பதி மலைவாழும் ஸ்ரீவேங்கடேசா !
(திருப்பாதம்)

**அனுபல்லவி**

மறுப்பேதும் கூருமல் அருள்சிந்தும் கரங்கள்-திரு
மலையேறி வருவோர்க்குத் தருவாய்நீ வரங்கள்!
(திருப்பாதம்)

**சரணம்**

பொறுப்போதும் இல்லாமல் புவிமீதில் வளர்ந்தேன் !
புதுப்பாதை நீகாட்ட புறப்பட்டு வந்தேன்!
அருட்தாகம் மிகவாகி உனைத்தேடி அடைந்தேன் !
ஐயா! உன் விழிகாண மலைஏழு கடந்தேன்!
(திருப்பாதம்)

*(5-ம் பக்கத் தொடர்ச்சி)*

*பறவை ஓசை எழுப்புவதைக் கேட்டும் எமது தலைவி மனம் பொறுக்கமாட்டாள். எனவே இவள்பால் உனது பார்வையைச் செலுத்தி அருள் செய்வாயாக' என்னும் பொருள்படும் பாடல் படிப்போர் நெஞ்சத்தைக் கொள்ளை கொள்வதாக இருக்கிறது.*

மேலும்—

*மற்றொரு செய்யுளில் தலைவனைப் பிரிந்த தலைவி கடலோடு புலம்புவதாகப் பொருள்படும் கருத்தினை உள்ளடக்கி எழுதியுள்ளார் ஆசிரியர்.*

**''ஒருமாது அவனி, ஒருமாது செல்வி
உடன் உறைய
வரும் ஆதவனின் மகுடம் வில்வீச
வடமலை மேல்
கருமாதவன் கண்ணன் நின்பால் திரு
நெடுங்கண் வளர்கைக்கு
அருமாதவம் என்ன செய்தாய் ? பணி
எனக்கு அம்புதியே''**
*(திருவேங் : 10)*

*'ஒரு பெண்ணாகிய நிலமடந்தையும் ஒரு பெண்ணாகிய இலட்சுமியும் தன்னுடன் இருக்கவும், கீழ்த்திசையில் கடலில் எழுகின்ற ஆதவனைப்போலத் திருமாலின் மகுடம் ஒளி வீசவும், வடதிருவேங்கட மலையிலே உறையும் கரிய மேனியை உடைய மாதவன், கண்ணன் நின்பால் உறங்குவதற்கு, கடலே! நீ எப்படிபட்ட தவம் செய்தாய் என்று எனக்குச் சொல்வாயாக!' என்ற பொருள் அமையும்படி பாடியுள்ளார் ஆசிரியர்.*

*திருமால் கடலிடம் உறங்குவதற்காக அது செய்த தவத்தைக் கூறினால், அத்தவத்தினைத் தானும் செய்து தன்னருகே அவன் உறங்கும் பேற்றினைப் பெறலாம் என்பது அபலைப் பெண்ணின் கூற்றாகும்.*

## *அறத்தொடு நிற்றல் :*

*அகப்பொருள் இலக்கணத்தில் 'அறத்தொடு நிற்றல்' என்பதும் ஒரு பிரிவாகும். தலைவி ஒருவனைக் காதலித்திருக்கிறாள் என்னும் செய்தியை உரிய முறையில் தோழி செவிலிக்கும், செவிலி, பெற்ற தாய்க்கும், தாய், தந்தை, பெண்ணின் உடன் பிறந்தார் ஆகியோருக்கும் கூறுவது ஆகும்.*

**''அறத்தொடு நிற்கும் காலத்து அன்றி
அறத்தியல் மரபு இலள்தோழி என்ப''**
தொல்காப்பியம் ;
பொருளியல் : 206)

*அதாவது தலைவி களவொழுக்கத்தைத் தன்னைச் சார்ந்தோர்க்கு அறிவிக்கவேண்டும் என்னும் கருத்து இல்லாமல் இருப்பாளே ஆனால் தோழியும் அறத்தின் வழி நின்று தம்மைச் சார்ந்தோர்க்குத்தலைவியின் கனவைப் பற்றி கூறாமல் இருப்பாள். சில இன்றியமையாத சூழ்நிலைகளில் தலைவியின் கனவு பற்றித் தம்மைச்சார்ந்தோர்க்குக் கூறித் தலைவியின் கற்புக் கெடாமல் தோழி காப்பாள்.*

*தலைவனோடு தலைவி கொண்ட களவு ஒழுக்கத்தினால் அவள் உடல் வேறுபாடு அடையும். அவ்வேறுபாட்டை தலைவியின் நாற்றம், தோற்றம், உண்டி, ஒழுக்கம், செய்வினைமறைப்பு பயில்வு, செலவு (தொல்காப்பியம் ; களவியல் , 114. ) ஆகியவை மூலம் உணரலாம்.*

*தோழி அறத்தொடு நிற்க வேண்டிய சூழல்களாவன தலைவியை மாற்றான் ஒருவனுக்குப் பெற்றோர் திருமணம் செய்து வைக்க முடிவெடுக்கும்போதும், தலைவியின் உடல் மாற்றத்தைக் கண்டு அவள்மேல் தெய்வம் ஏறிற்று என்று பெற்றோர் முடிவு செய்து பெண்ணின்மேல் ஏறிய தெய்வத்தை ஓட்டுபவளாகிய 'கட்டுவிச்சி' யை அழைத்து, வெறியாட்டு நிகழ்த்த இருக்கும் போதும், தலைவியின் கற்புக் கெடாமல் காத்து அறத்தொடு நிற்றல் தோழியின் கடன் ஆகும்.*

*தலைவி புனல் விளையாட்டு அயர்ந்த போது,தவறி நீரால் அடித்துச்செல்ல, உயிரையும் பொருட்படுத்தாது, நீரில் பாய்ந்து, அவளை மார்போடு தழுவிக் கரை சேர்த்துக் காப்பாற்றியவன் இன்னான் எ... யானையிடம் இரு... ...றான் என்பதனையும் தோ... சார்ந்தோர்க்குக் கூறி, அவ... ளுக்கு ஏற்றவன் என்பதனையும், அவ... விட்டு, மாற்றான் ஒருவனை தலைவிக்கு மணமகனாகத் தேர்ந்தெடுப்பின் தலைவியின் கற்பொழுக்கம் கெடும் என்பதனையும் கூறி நெறிப்படுத்துவதே 'அறத்தொடு நிற்றல்' ஆகும். இதுவே அறத்தொடு நிற்றல் என்று அகப்பொருள் இலக்கியங்களிலும், இலக்கணங்களிலும் பேசப்படுகிறது.*

*இந்நூலில், தலைவி தோழியர்க்கு அறத்தொடு நிற்றல் என்னும் முறையில் அமைந்துள்ள ஒரு செய்யுளை நோக்குவோம்.*

*தலைமகனைக் களவொழுக்கத்தால் கூடினாள் தலைவி. தலைமகன் ஏதோஒரு காரணம் பற்றிப் பிரிந்து செல்கிறான். அவனுடைய பிரிவு அவளை மிகவும் மனக்கலக்கம் அடையச் செய்கிறது.*

**''தொடின் சுடின் அல்லது காமநோய் போல
விடின் சுடல் ஆற்றுமோ தீ''**
திருக்குறள் : இன்பம் ; பிரிவு
ஆற்றாமை : 1159)

*தீயோ, தன்னைத் தொட்டாரை மட்டுமே சுடும். ஆனால் காமநோயோ காதலர், ஒருவரை விட்டு ஒருவர் அகன்றால் சுடும் தன்மை உடையது என்று திருவள்ளுவரின் இன்பத்துப் பால் தலைவியே கூறுகிறாள் என்றால் அவளைப்பற்றிக் கூறவும் வேண்டுமா?*

*தலைவியின் துன்பத்திற்குக் காரணம் அறியாத அவளுடைய தோழியர் அவளுக்கு ஆயிரம் பணிவிடைகளைச் செய்கிறார்கள். இருப்பினும் அவளுடைய துன்பத்தைத் துடைக்க அவர்களால் இயலவில்லை. பிரிவாகிய நெருப்பு தலைவியைச் சுடுகின்றது. அந்தத் துன்பத்தை அவளால் ஆற்ற இயலவில்லை. எனவே தலைவி தனது துன்பத்தின் காரணத்தைத் தோழியர்க்கு வெளிப்படையாகக் கூறுகின்றாள்:*

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

வேலாயுதத்தால்

இரு கூறுக்கி

மயில்



# நடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

...சாரி,
,
ர... ஸ், கும்பகோணம்.

திரு. வெ... ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம்
சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞசல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன்
19—வது பிளாக் [கோயில் வீதி.
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார,
c/o N. கோதண்டராமன், கனரா
பேங்க், 25, நந்தி கோயில் தெரு,
தெப்பக்குளம், திருச்சி-2.

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

திருமதி.ஏ.வனஜாகிருஷ்ணமூர்த்தி,
46, பழனியாண்டவர்கோயில்தெரு,
களஞ்சியம் ஏஜென்ஸீஸ்,
கொஸபாளையம், ஆரணி-1.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட், ஜெய்பூர் (P.O.)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸடோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு.எஸ்.என்.கிருஷ்ணய்யாசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. கே. எஸ். கோதண்ட
ராமய்யா, M.A., B.O.L.,.B.T.,
ஒசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏகஜண்ட், நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள்
தஞ்சாவூர். [வீதி,

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை, சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. வி. ஆறுமுகம்,
பழைய இரும்பு வியாபாரம்,
72. காந்தி மார்க்கட்,
பொள்ளாச்சி—642001.

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல், கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸாசார்யா,
4, சௌந்தரம்மாள் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல்
கிழக்கு பஸ் நிலையம், [மர்ச்சண்ட,
சித்தரதுர்க்கா.

திரு. வி. திருவேங்கடம் நாயுடு,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. ஏ. என். கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராம்மோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

கேப்டன். டி. இ. என். சாரி, பி.ஏ.
16, ஜி. எஸ். டி. ரோடு,
செங்கற்பட்டு—603001.

திரு. கே. ஆர். பாஸ்கர் செட்டி,
22/110,மெயின் தெரு, குண்டக்கல்
அனந்தப்பூர் மாவட்டம்
ஆ. பி. (P.O.)

திரு. வி. லக்ஷ்மி நாராயண செட்டி
மளிகை, பஜார் தெரு, [யார்
இடப்பாடி, சேலம் மாவட்டம்.

திரு. எம். வீரபாகு,
19, தெற்கு ரத வீதி,
ஆழ்வார் திருநகரி, தமிழ் நாடு.

திரு. எஸ். ஜகன்னாதன்,
17-3-1/5 சுந்தரய்யர் வீதி,
சித்தூர். (ஆ. பி.)

திரு. பி. ராஜமாணிக்கம்,
1 மஹாலி அம்மன் கோயில் தெரு,
ஆனைமலை-642104.

திரு. எம். வெங்கடராம அய்யர்,
நெ. 8, தாரகேசவரர் சுவாமி வீதி,
தோட்டபாளையம், வேலூர்.

திரு. ஏ. கணபதி பிள்ளை,
ஸ்டாம்ப் வெண்டார்,
அறகண்ட நல்லூர்—605752.

திருமதி. எஸ். சீதாலக்ஷ்மி,
1, ஜவுளிக்கார தெருவு,
திருவாரூர்—610001.

திரு. எம். வீரபாகு
19, தெற்கு ரத வீதி,
ஆழ்வார் திருநகரி-628612.

(தொடர்ச்சி 36-ம் பக்கம்)

''நெஞ்சு உகந்தத்தை உமக்கு உரைத்
தேன் இற்றை நீடு இரவு ஒன்று
அஞ்சுகம் தத்தை விளைக்கும் என் ஆசை
அமிழ்தாம் இதழ்சொல
கிஞ்சுகம் தத்தை அனையீர்! இங்கு
என்னைக் கெடாது விடும்
விஞ்சு கந்தத்தை விளைக்கும் துழாய்
அண்ணல வேங்கடத்தே.

*(திருவேங் : 12)*

*'முருக்க மலரைப் போன்ற வாயினை யும், கிளியைப் போன்ற இனிய பேச்சினையும் உடைய தோழியரே! எனது நெஞ்சம் விழைந்ததை உமக்கு உரைக்கின்றேன். இன்றைய ஓர் இரவு என்னைப் பொறுத்த மட்டில் ஐந்து யுகங்களாகக் கழிந்து கொண்டு இருக்கின்றது. இனியும் இஙகு என்னை வைத்திருத்தல் வேண்டாம். அது எனக்குக் கேடு விளைவிக்கும். எனவே, என்னை, மணம் வீசுகின்றதுழாய் மாலை அணிந்த திருவேங்கடவனுகிய எனது காதலனிடம் கொணடு செல்லுங்கள்' என்னும் பொருளிலே தலைவி தோழியரைப் பார்த்து விண்ணப்பம் செய்து கொள்வதாகப் பாடல் அமைந்துள்ளது.*

*தனது கற்பொழுக்கம் கெடாதிருக்கும் பொருட்டுத் தலைவி தோழியர்க்கு அறத்தொடு நிற்கிருள். (மேற்காணும் செய்யுளோடு 'நந்திக்கலம்பகம்' என்னும் நூலின் 'மாட்டாதே. . . .' என்று தொடங்கும் 46 ஆம் செய்யுளை ஒப்புநோக்கி மகிழ்க)*

*தலைவியின் ஆற்ருமையைக் கண்டு செவிலித்தாய் இரக்கப்படுவதாக இந நூலில் அமைந்துள்ள ஒரு பாடலைக் காண்போம்.*

''சென்னியில் அம்கை குவிக்கும், உயிர்க
கும், திகைக்கும், நின்னை
உன்னி இலங்கு அயில்கண் உறங்காள
உயர் வீடணனை
'மன்னி இலங்கையில் வாழ்க! என்ற
என்ற வேங்கடவாணா! மற்ருேர்
கன்னி இலம் கைக்கு நினபோர் கருணைக்
கடல அலலவே''.

*(திருவேங் : 15)*

# கீதை வழி

**க. அ. பிரகாசம்**
கொடுமுடி.

கண்ணன் துணையே ராதை — நாம்
காணும் துணையே கீதை.
மண்ணின் தருமப் பாதை — அது
மாறறும் மருவும் நிதை.

பண்ணும கருமம பேசும — போா
பண்பு மணமே வீசும.
கண்ணும் கருத்தும ஒனறி — அதை
கற்ருல சொலவோம் நன்றி.

அனபைப் பண்பைப் போற்றும் — வளர்
அறிவை உயர்த்துச் சாற்றும்.
இன்பும் இனிமைபும் கூட்டும — துயர்
இன்னல் பலவும் ஒட்டும்.

அற்பச் சக்தியைக் கொல்லும் — மிகு
அன்புச் சகதியை வெல்லும்.
அற்புத நிலையைச் சொலலும் — மனம்
ஆன்ம வழியில் செல்லும்.

ராதை நெஞ்சம் கீதை — அந்தக்
கீதை கண்ணன பாதை
பாதை காட்டும் காதை — அதில்
படர்ந்தால் வெலவோம் வாதை.

பண்ணிய பாவமேபல பாரினில் — அவற்றை
எண்ணியே வாணுளைக் கழித்திடாமல்
மண்ணோர் மாண்புற்று விளங்கிடவே — செல்வோம்
கண்ணனின் கீதை வழியில்.

*தலைவனின் பிரிவால தலைவி அடையும துன்பங்களையெல்லாம் கண்டு செவிலித்தாய் வருந்துகிருள். தனது வருத்தம் மிகுதியினுல் தலைவனை எதிரில் வைத்துப் பேசுவது போலக் கருதி அவனை விளித்துத் தலைவியின் ஆற்ருமையைக் கூறி அவளை ஆட்கொள்ள வேண்டுகிருள்.*

*''உயர்ந்த வீடணனை, 'இலங்கையில் நிலை பெற்று வாழ்க!' என்று வாழ்த்திய வேங்கட வாணனே! உன்னை நினைத்து எனது மகள் தனது செம்மையான கைகளைத் தலையின் மேலே வைத்துக் குவித்து வணங்குகிருள்; பெருமூச்சு விடுகின்ருள். திகைக்கிருள். உன்னையே நினைத்து வேல்போன்ற தனது கண்களை மூடி உறங்காள். இவள் நிலை இரங்கத் தக்கதாக உள்ளது. இவளைத் தவிர எமக்கு வேறு பெண் பிள்ளையும் கிடையாது. இவளை ஆட்கொண்டு அருள்க. இன்றேல் உன்னைக் கருணைக் கடல் என்கிருர்களே, அதில் என்ன பொருள் உள்ளது?'' இவ்வாறு செவிலித்தாய் கூறுவதாக மேற்காணும் பாடல் பொருள் தருகிறது.*

செவிலித்தாயின் நிலையில் நின்று ஆசிரியர் பேசுகின்ருர். இதனை இலக்கியத்திறனுய்வாளர் 'கூடுவிட்டுக் கூடு பாய்தல்' என்னும் உத்தி என்று கூறுவர்:

மற்றுேர் பாடல் தலைவியின் வருத்தம் கண்டு ஆற்றுளாகிய தோழி நிலவைப் பார்த்துக கூறுவதாக அமைந்துள்ளது.

தலைவி, தலைவனைப் பிரிய, நாட்கள் பல கழிந்தன. அவளுடைய தலைவன் வேறுயாருமல்லர், வேங்கடமலையிலே கோயில் கொண்டுள்ள திருமால்தாம். தோழி வானத்தில் பவனி வரும் மதியைப் பார்க்கிறுள். அதன் நிலையும் தனது தலைவியின் நிலையும் அவளுக்கு ஒன்று போலத் தோன்றுகிறது. தலைவிக்கும், நிலவுக்கும் 'சிலேடை' கூறுகிருள் தோழி.

''நிலவே! அகன்ற வான் வெளியில் நீ ஓரிடத்தில் நிலைத்துத் தங்காமல் அலைந்து திரிகின்றுய். எமது தலைவியின் நிலையும் அதுதான். தனது விரக தாபத்திஞல் அவள் ஓரிடத்தில் நிலை கொள்வது இல்லை.

நீ ஒவ்வொரு நாளும் கலைகள் நீங்கப் பெறுகிறுய். எமது தலைவியோ, தனது தலைவனின் நினைவிஞல் உடல் இளைக்கப்பெற்றுத் தனது ஆடை நழுவப்பெற்றுள்.

நிலவே! சிலவேளைகளில் நீ உன்னுடைய இயல்பான நிறம் நீங்கி வெளுத்துக் காணப்படுவாய். தலைவியும் தனது அழகிய நிறம் மாறுபட்டு உடல் வெளுத்துக் காட்சி தருகிறுள்.

நீயோ, நாளுக்குநாள் தேய்மானம் அடைவாய் எனது தலைவியும் தேய்ந்து உடல் இளைக்கப்பெற்றுள்.

நீயோ, எப்போதும் குளிர்ச்சி நிரம்பியவஞக இருப்பாய். தண்மதி எனும் பெயரும் உனக்கு உண்டு. தலைவியோ தலைவனைப் பிரிந்த காரணத்தால் தனது கணகளில் எப்போதும் கண்ணீர் சிந்தியவளாகவே இருக்கிறுள்.

நீயோ, உன்னிடத்தில் களங்கம் உடையவஞக இருக்கிறுய். எமது தலைவியோ, தலைவனின் பிரிவால் பல நாட்கள் நீராடாமல் இருக்கும் காரணத்தால் அவள் உடலில் மாசு படிந்து காணப்படுகின்றுள். ஆகவே, நிலவே! உனது நிலையும், எமது தலைவியின் நிலையும் ஒன்றுகவே இருக்கின்றது. ஆகவே, எமது தலைவி காதலித்த திருவேங்கட மலையில் கோயில் கொண்டுள்ள இராமஞய்ப்பிறந்த திருமாலை நீயும் விரும்பிஞயோ? சொல் வாயாக'' என்னும் பொருள் அமைய,

''பற்றி இராமல் கலைபோய் வெளுத்து
உடல் பாதிஇரா
வற்றி இராப்பகல் நின்கண் பனிமல்கி
மாசு அடைந்து
நிற்றி இராக மொழிசசியைப் போல்
நெடு வேங்கடத்துள்
வெற்றி இராமனை வேட்டாய் கொல்நீயும்?
சொல் வெண்மதியே''.

(திருவேங் : 19)

என்று தோழியின் நிலையில் இருந்து பாடுகிறுர் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்.

## முடிவுரை :

இந்நூலில் இடம் பெற்றுள்ள கருத்துகள் மிகவும் எளிமை வாய்ந்தவை. ஆங்காங்கே திருமாலைப் பற்றிய அவதாரக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. அவை வைணவர்களுக்குப் பெரு விருந்தாகும்; ஆனுல் நூலின் நடையும், சொல்லாட்சியும் கற்று வல்ல பண்டிதரால் மட்டுமே படித்துப் பொருள் கொள்ள இயல்வதாக இருக்கிறது. ஒவ்வாரு செய்யுளின் முதலடி முதல் சீரில் ஓரேமாதிரியாக இருக்கும் சொற்களை வெவ்வேறு முறையில் பிரித்துப் பொருள் செய்யும் ஆற்றல் அனைவருக்கும் இருக்கும் என்று சொல்ல முடியாது. இருப்பினும் கற்றேர்க்கு இந்நூல் கருப்பஞ்சாறு என்பதில் ஐயமில்லை. தற்கால இலக்கிய ஆய்வாளர்களும், சுவைஞர்களும் இதனை ஒரு சமய நூலாக மட்டுமன்றி, ஓர் இலக்கிய நூலாகவும் படித்தறிந்தால் பயன் பல பெறலாம்.



# திருமலை ஒழுகு

விழாக்கள்

திருமலையில் புரட்டாசித் திருநாள் முதன் முதல் பிரமதேவனல் தொடங்கப்பட்ட தென்பது புராணங்களால் அறியக்கிடக்கின்றது. திருவேங்கடமுடையானகிய மூலமூர்த்தி, தானே தோன்றியவர் என்று நூல்கள் கூறுகின்றன.

பல்லவர் காலத்துக்குமுன், அப்பெருமானது கோயில் சிறிய அளவுவுடையதாய் இருந்தது. ஊரும் விரிவாக இல்லை. அக்காலத்தில் பிரமோற்சவம் எவ்வாறு நடைபெற்று வந்தது என்று அறிவதற்கு ஆதாரம் இல்லை. கி. பி. பத்தாம் நூற்றண்டின் இறுதியில், சாமவை என்னும் பல்லவ அரசி, மணவாளப் பெருமாள் என்னும் வெள்ளி விக்கிரகத்தை அமைத்துப் புரட்டாசித் திருவிழாவிற்காகத் திருச்சுகனூரில் உள்ள நிலங்களை அளித்தாள். அதன் பின் புரட்டாசித் திருவிழாச் சிறப்புற நடைபெற்றது. திருமலை ஒழுகின்படி அவ்விழா, திருச்சுகனூரிலே சிலகாலம் நடந்திருத்தல் வேண்டும். அஃது இராமாநுசர் காலத்தில் திருமலையில் நிகழ்ந்து வந்தது.

புரட்டாசி மாதத்திலே யன்றி, வைகாசி,மார்கழி நீங்கலாக மற்றைய பத்து மாதங்களிலும், ஒவ்வொரு வரால் இத் திருவிழா நடத்தப்பட்டதாகக் கூறப்படினும் புரட்டாசித் திருவிழாவே முதன்மைபெற்றது. கல்வெட்டுக்களில் இவ்விழாக்கள் திருக்கொடித் திருநாள் எனப்படுதலால், ஒவ்வொரு மாதமும் விழாவின் போது கொடி யேற்றுதல் உண்டு என்று தெரிகிறது. ( Ins. Vol. IV No. 129 ) ''...... தம்முடைய உபயமாக ஆநி மாஸத்தில் திருவோண நக்ஷத்ரம் அங்குரார்ப்பணமும் சதயம் திருமுளையும் தம்முடைய நக்ஷத்ரம் மிருகசீரஷம் தீர்த்தவாரியுமாக விடாயாற்றி வரைக்கும் நாள் 13-க்கு திருக்கொடி திருநாள்'' என வருவதால் புரட்டாசியைத் தவிர மற்றைய மாதங்களில் திருவோணத்தில் தீர்த்த வாரி நடக்க வேண்டும் என்னும் நியதி இல்லை என்க.

ஊஞ்சல் விழா, கோடைத் திருநாள், திருப்பள்ளி ஓடத் திருநாள் முதலாகப் பல விழாக்களும் அக்காலத்தில் நடந்தன. அத்யயனோத்ஸவமும், அதன் இறுதில் தண்ணீரமுது வழி திருத்து விழாவும் இப்போது போலவே அப்போதும் நடைபெற்றன. அத்யயனோத்ஸவத்தில் கடைகொழி நாச்சியார் திருவத்யயனம் என்பதொன்று நடந்து வந்ததாக (Vol. II No. 95. 27-9-1491) அறிகின்றோம். அதன் வரலாறு தெரியவில்லை. திருமலை ஒழுகிற் குறிப்பிட்டபடியே திருவத்யயனத்தில் இயற்பா முதலாக நூற்றந்தாதி ஈருக இருபத்து மூன்று நாட்கள் திவ்வியப் பிரபந்தம் ஓதப்பட்டு வந்த தென்பது கி.பி. 1485-ல் ஏற்பட்ட (Vol. II 83) கல் வெட்டினல் தெரிகிறது.

புஷ்பயாகம் என்னும் விழா, விடாயாற்றிக்கு முன் நடந்து வந்தது. அன்று உற்சவ மூர்த்தியைத் திருமேனி முழுதும் பூக்களால் அலங்கரித்துப் பன்னிரண்டு முறை திருவாராதனம் நடத்துவர். இப்போது அவ்விழாநடைபெறுவதில்லை. திருவேங்கட முடையானுக்குக் கல்யாண உற்சவத்தை (வைவாஹிகோத்ஸவம்) ஐந்து நாள் செய்யுமாறு, பெரிய திருமலை ஐயங்கார் குமாரரான சின்னண்ணு என்னும் திருவேங்கட நாதர் கி. பி. 1546-ல் ஏற்பாடு செய்து அதன் செலவுக்காக 120-ரேகை கெட்டிப் பொன் வருவாயுள்ள மல்லவரம் என்னும் ஊரை நன்கொடையாக அளித்தார். இப்போது இவ்விழா நடக்காவிடினும் இக் கல்யாணவிழா திருமலையில் ஏறக்குறை நாள்தோறும் அன்பர்களால் நடத்தப்பட்டு வருகின்றது.

திருமலையில் நடக்கும் விழாக்கள் எல்லாம் பண்டைக் காலத்து முறைப்படியே இன்னும் நடந்து வருகின்றன.

திருப்பதியில் கோவிந்தராசருக்கு ஒவ்வொரு வைகாசி மாதமும், இராமாநுசர் ஏற்பாட்டின்படி திருக்கொடித் திருநாள் நடக்கின்றது. வீர நரசிங்க யாதவராயன் மனைவியாகிய யாதவ நாச்சியார் என்பவர் கி. பி. 1245-ல் ஆனித் திருவிழாவை ஏற்படுத்தி, அதற்காக ஒரு திருத்தேர் கட்டி, மற்றும் வேறு திருப்பணிகளும் செய்து வைத்தார் அதன் பின் ஆனி விழா நடந்து வந்தது. பெரும்பான்மையான விழாக்கள் திருவேங்கடமுடையானுக்கும் கோவிந்தராசனுக்கும் ஒரு வகையாகச் செய்யப்பட்ட போதிலும் ஒரே காலத்தில் நடைபெருமல், அனபர்கள் சேவிப்பதற்குத் தகுதியாக வெவ்வேறு காலங்களிற் செய்யப்படுகின்றன.

## வேறு செய்திகள்

திருவேங்கடமுடையானுக்குப் பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை புழுகு காப்புமுறை கி.பி 1496-ல் நடந்தது. பின்னர், ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அது நடைபெற வேண்டுமென்று கி.பி. 1534-ல் ஏற்பாடு செய்யப்பட்டது. இது பெருமானுக்குப்புனுகுக் குழம்பால் காப்பிடும் முறையாகும். இப் புனுகு, மிதித்த புழுகு எனப்பட்டது. பலவகைப்பட்ட வாசனைப் பொருள்களைக்கலந்து செய்யப் பட்டமையால் இவ்வாறு கூறப்பட்டது போலும். இப் புழுகு காப்பு 'புளிக் காப்பு' எனத் தவருக வழங்கப் படுகிறது.

(தொடரும்)

# தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்குழு முடிவுகள்

(திருமலையில் 6-7-79 அன்று நடைபெற்ற குழுக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு)

தனிப்பட்ட நன்கொடைத் திட்டத்தின் கீழ் பக்தர்களிடமிருந்து ரூ. 500 பெற்றுக்கொண்டு அத்தொகையினை முதலாக வைத்து, அதனுல் வரும் வங்கி வட்டித்தொகைககு 20 லட்டுகள் அல்லது 15 வடைகள் இலவசமாக, நன்கொடை அளிப்பவரின் விருப்பநாளின் போது, வருடம் ஒரு முறை ஏழை யாததிரிகப் பொதுமக்களுக்கு வழங்கும் வகையிலும், இதனைப்போன்றே மற்ருெரு திட்டத்தின் கீழ் இலவச உணவுப் பொட்டலங்களை "க்யூ"வில் இருக்கும் ஏழை யாத்திரிகப் பொதுமக்களுக்கு வழங்கும் வகையிலும் முடிவுசெய்யப்பட்ட குழு தீர்மானத்தைத் தொடர்ந்து இத்திட்டங்களைச் செயற்படுத்துவதற்கான முழு செயல்முறைகள் அடுத்த குழுக் கூட்டத்தில் விவாதிக்கப்படும்.

* * * * *

திருமலையில் "அங்கபிரதக்ஷணம" செய்ய விரும்பும் பக்தர்களை கோயிலுக்குள் தினந்தோறும் காலை 3 மணி முதல் 4 மணிக்குள் அனுமதிப்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

* * * * *

எதிர்காலத்தில் இனி மேற்கொண்டு கோயில் பிரஸாதமான லட்டுகளுக்கு பழுப்புநிற காகித உறைகளைப் பயன்படுத்துவதென்று குழு தீர்மானித்துள்ளது.

* * * * *

இந்து சமய வளர்ச்சியின் அவசியத்தை மனதிற்கொண்டு, சமயம சமபந்தப்பட்ட நூல்களை ஏராளமாக வெளியிடும் வகையில்,தற்போதைய திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் அச்சகத்தினை விரிவுபடுத்த பல்வேறு வகையான அச்சுககலை சம்பந்தப்பட்ட நவீன இயந்திரஙகளை வாங்கவும், அச்சகத்தின்பிரிவுகளை மேலும் விரிவுப்படுததவும் குழு முடிவு செய்துள்ளது. உருவாக இருக்கும் புதிய தி. தி. தே. அச்சகத்திற்கு, அலிபிரிக்கு அருகே உள்ள சுமார் 10 ஏக்கர் நிலப்பரப்பினை ஒதுக்குவதென்று குழு தீர்மானித்துள்ளது. இப்புதிய அச்சகக்கட்டிடம் இரு பகுதிகளுடன் விளங்கி, ஒரு பகுதியில் பிளாக் தயார் செய்யும் நிலையம், பைண்டிங், கமபோஸிங், பிரிண்டிங் பிரிவுகள் ஆகியவற்றையும், மற்ருெருபகுதி சமய நூல்களைக் கொண்டு விளங்கும் நூல்நிலையம, விற்பனைநிலையம், ஆராயச்சி மாணவர்களுக்கான சிறு விடுதி, கருத்தரங்குக் கூடம் ஆகியவறறினைக் கொண்டு விளங்கும்.

* * * * *

சுமார் ரூ. 10 இலட்சம் செலவில் திருப்பதியிலும் திருமலையிலும் தி. தி. தேவஸ்தானததாரின் இரு அரும் பொருட்காட்சிச்சாலைகளை அமைப்பதென்று குழு முடிவு செய்துள்ளது. இதில் ஒன்று இவ்வருடமும், மற்ருெனறு அடுத்த வருடமும் அமைககப்பட உள்ளன.

* * * * *

தி. தி. தேவஸ்தானத்தாரிடம் உள்ள சமய நூல்களை மததிய, வட்டார மற்றும், மாநில நூல் நிலையங்களுக்கு நன்கொடையாக அளிப்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

* * * * *

அரசு ஊழியர் தன் கடமையை ஆற்றிக் கொண்டிருக்கும் சமயத்து. அல்லது தன்கடமை சமபந்தப்பட்ட பணியில் ஈடுபட்டிருக்கும் சமயதது இறந்தாரேயாயின் அவருடைய இறுதிக்கடன் செலவுகளுககாக அன்னாரின நெருங்கிய உறவினர்ககு ரூ. 500 வழங்குவதென்ற ஆந்திரமாநிலதின் எம். எஸ். எண். 104/ஜி.ஏ (ஏ.ஆர். மற்றும் டி. 2/ துறை தேதி 3-2-79 என்ற அரசு உத்திரவினை தி.தி. தேவஸ்தானமும அமுலாக்குவதற்கு குழு அனுமதி அளிததுள்ளது.

* * * * *

ஆந்திரப் பிரதேசம் சித்தூர் மாவட்டம் மறறும வேலூர் அல்லாத வெளி மாவட்டங்களில் பணிபுரியும் தேவஸ்தான ஊழியர்களுக்கு (Non-Teching) அதிகப்படியாக அவர்களுடைய அடிப்படை சம்பளததில் 10% (குறைந்தபட்சம ரூ. 15/- அதிகப்படசம் ரூ. 75/-) மாதத்திற்கு வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது. (இச்சலுகை தி. தி. தே. தகவலறிவிபபு நிலையங்கள், ரிஷிகேசததிலுள்ள ஆந்திர ஆஷ்ரமம, புதுத்தில்லி ஆகிய இடங்களில் உள்ள ஊழியர்களுக்கு, அவர்களுக்கு ஏற்கெனவே சிறப்பு ஊதியம் நிர்ணயிக்கப் பட்டிருப்பதால், வழங்கப்பட மாட்டாது)

* * * * *

திருப்பதிக்கும் திருமலைக்கும்இடையே உள்ள மலைவழிச் சாலையில் நடந்து செல்லும் யாத்திரிகர்களுக்கு ஏற்படும் களைப்பினைக் குறைக்கும வகையில், திருமலையில் நடக்கும் சமயநிகழ்ச்சிகள், இசைநிகழ்ச்சிகள்மற்றும் கோயில் சமபந்தப்பட்ட தகவல்கள் ஆகியவற்றை வழிநெடுகிலும் ஒலிபரப்பும வகையில் 25 ஒலிப்பெருக்கிகள் 120 வாட்ஸ ஆம்ப்ளிஃபயர் ஒன்று, மற்றும் பல ஒலிபரப்பு சாதனங்களை வாங்குவதற்குக்குழு ரூ. 1,00,000 ஒதுக்கியுள்ளது.

* * * * *

திருமலைக்கோயிலில் நடத்தப்படுவது போனறு திருச்சானூரில் உள்ள ஸ்ரீபத்மாவதிததாயார் கோயிலும் திருப்பாவாடா சேவையை கிருஹஸ்தர்கள் நடத்துவதற்கு குழு அனுமதி அளிததுள்ளது. கிருஹஸ்தரைச்சார்ந்த 12 நபர்கள் அனுமதிக்கும் படியான இவ் ஆர்ஜித சேவைக்கான கட்டணம் ரூ. 1500/-

* * * * *

திருமலைக கோயிலில் பல்வேறு ஆர்ஜித சேவைகளை நடத்தவரும் யாத்திரிகளுக்கு எளிதாக திருமலையில் தங்கு வசதிகள் கிடைக்கச் செய்யும் வகையில் திருமலையில் சமூகத் திருமணங்கள் மற்றும் திருமலையில் புனித சூழ்நிலைக்கு எந்தவித இடையூறு நேராதவகையில், தி. தி. தே. மேலாண்மைக்குழு கூட்டங்கள் தவிர மற்றைய மாநில, வட்டார, மாவட்ட அளவில் எந்தவிதமான மாநாடுகள் அல்லது குழுக் கூட்டங்கள் நடைபெறுவதற்கு அனுமதிததல் கூடாது என்ற அரசு ஆலோசனையை ஏற்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

* * * * *

புதுததில்லியைச் சார்ந்த நாட்டிய இசைக் குழுவின் சார்பில், "திருப்பதி வேங்கடேஸ்வர மகாதமியம்" எனும் நாட்டிய நாடகத்தை நடத்துவதற்கு, அககுழுவிற்கு ரூ. 1,54,600/- வழங்க குழு ஒப்புதல் அளித்துள்ளது.

* * * * *

தி. தி. தேவஸ்தானத்தாரால் நிறுவப்பட்டகலாக்ஷேததிரம் இனிமேற்கொண்டு, "தி. தி. தேவஸ்தான கலா பாரதி" என்ற பெயரால் அழைகப்படும். இத்துறையின் ஆரம்ப செலவுகளுக்காக ரூ. 2,00,000/- வழங்க குழு முடிவுசெய்துள்ளது.



# ராசி பலன் (1-8-79 முதல் 31-8-79 வரை)

டாக்டர் டி: அர்க்கசோமயாஜி, M.A., PhD.,
திருப்பதி:

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய)

ராகுவினால் கவலைகள்; சனியினால் பிள்ளைகள் அல்லது புதல்வியருடன் பிரிவு அல்லது பண நஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள்; குருவினால் உறவினர்கள் மூலம் கவலைகள், புதனால் மேற்கூறிய கிரகங்களினால்ஏற்படும் தீமைகளுக்கு ஈடுசெய்யும் வகையில் நன்மைகள் ஏற்படல், பணவரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி; செவ்வாயினால் பிள்ளைகள் மூலம் அல்லது தவறான வழியில் பணவரவு; சூரியனால் உடல் நலம்கெடல் அல்லது எதிரிகளால் கவலைகளுக்குள்ளாதல்; சுக்கிரனால் நல்ல நண்பர்கள், பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல், அல்லது புதிய உறவுகள், பணவரவு அல்லது மக்கட்பேறு.

## ரிஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

ராகுவினால் கருத்து வேறுபாடுகள்; சனியினால் பணநஷ்டம் அல்லது உற்றார் உறவினர்களுடன் பிரிவு; குருவினால் ஏமாற்றங்கள்; புதனால் புதிய நட்புறவுகள் ஆனால் தன்னுடைய தவறான நடவடிக்கையினால் கவலைகளுக்குள்ளாதல்; செவ்வாயினால் அலுவலகக் கவலைகள் அல்லது கருத்து வேறுபாடுகளினால் கவலைக்குள்ளாதல் அல்லது வீட்டில் திருடு போதல் அல்லது உடல் நலம் கெடல்; சூரியனால் மாதத்தின் 17-ம் தேதிவரை பணவரவு அல்லது தன்னிலை உயர்தல் ஆனால் பிறகு உடல்நலம் கெடல்; சுக்கிரனால் புதிய ஆடை ஆபரணங்கள், அல்லது பணவரவு மற்றும் வெற்றி அல்லது மதிப்புயர்தல் மற்றும் நல்ல நண்பர்கள்.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

ராகுவினால் பணவரவு; சனியினாலும் பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள், உடல் நலமேன்மை மற்றும் வாகனவாய்ப்பு; குருவினால் பணவரவும் புதனால் பணவரவு ஆனால் இகழ்ச்சிக்குள்ளாதல்; செவ்வாயினால தீங்கு ஏற்படல்; சூரியனால் மாதத்தின் 17ம் தேதிவரை பணநஷ்டம் அல்லது மற்றவர்களால் ஏமாற்றப்படல் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல் ஆனால் இறுதி நாட்களின்போது பணவரவுஅல்லது தன்னிலை உயர்தல்; சுக்கிரனால் தானிய வகைகள் கிடைக்கப் பெறல் அல்லது பணவரவு, மதிப்புயர்தல் அல்லது மக்கட்பேறு அல்லது புதிய ஆபரணங்கள் மற்றும் எல்லா வகையிலும் வெற்றி.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

ராகுவினால் செலவினங்கள்; சனியினால் பணநஷ்டம், மகிழ்ச்சியின்மை; குருவினால் கருத்து வேறுபாடுகள் அல்லது பணநஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல், மனமகிழ்ச்சியின்மை; புதனால் தவறான ஆலோசனைகளைக் கேட்டதாலோ அல்லது கருத்துவேறுபாடுகளினாலோ பணநஷ்டம்; செவ்வாயினால் பொருள் வரட்சி, மனமகிழ்ச்சியின்மை; சூரியனால் மாதத்தின் 17-ம் தேதிவரை பிரயாணமும் களைப்பும் ஏற்படல்அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால்அவதிப்படல் அல்லது பணநஷ்டம், இறுதியில் பணநஷ்டம், மற்றவர்களால் வஞ்சிக்கப்படல், கண் நோயினால் அவதிப்படல்; சுக்கிரனால் 18-ம் தேதிவரை கேளிக்கைகளில் ஈடுபடல், மகிழ்ச்சி பிறகு பணவரவு, தானியவகைகள், மதிப்புயர்தல் அல்லது மக்கட்பேறு.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

ராகுவினால் கவலைகள்; சனியினால் பிரயாணமும், உடல்நலம் கெடலும் அல்லது பணநஷ்டம் அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடு கொளல் அல்லது பிறருக்கு தீமை விளைவித்தல்; குருவினால் பிரயாணம், உடல் நலம்

### சந்தாதாரர்களுக்கு...

30-9-79-ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன; ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

*64, 139, 140, 275, 277, 278, 280, 281, 370, 435, 473, 474, 475, 478, 479, 481, 482, 483, 484, 510, 915, 934, 935, 936, 937, 938, 939, 940, 941 943, 944, 945, 946, 947, 948, 949, 950, 951, 952, 953, 954, 955, 956, 957, 959, 960, 961, 962, 963, 965, 966, 967, 968, 969, 970, 971, 972, 973, 974, 975, 976, 977, 978, 979, 980, 981, 982, 983, 984, 985, 987, 988, 989, 990, 991, 992, 993. 994, 995, 996, 997, 998, 999, 1000, 1001, 1002, 1003, 1004. 1005, 1006, 1007, 1008, 1009, 1010, 1011, 1012, 1013, 1014, 1015, 1017, 1019, 1020, 1021, 1022, 1023, 1024, 1025, 1028, 1029, 1030, 1031, 1032, 1033, 1034, 1035, 1036, 1037, 1038, 1039, 1040, 1043, 1044, 1047, 1049, 1050, 1051, 1052, 1053, 1054, 1073, 1092.*

கெடல்; புதனுல் இகழ்ச்சிக்குள்ளாதல், உடல்நலம் கெடல், எதிரிகள் ஏற்படல்; செவ்வாயினுல் வெற்றி; சூரியனுல் 18-ம் தேதிவரை பணநஷ்டம், பிறகு பிரயாணம்அல்லது வயிற்று நோயினுல் அவதிப்படல் அல்லது பணநஷ்டம்; சுக்கிரனுல் 18-ம் தேதி வரை எந்தவித மாற்றமும் ஏற்படாது பிறகு கேளிக்கைகளில் ஈடுபடல்.

## கன்னி

**(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)**

ராகுவினுலும், சனியினுலும் கவலைகள்; குருவினுல் அதிக பணவரவு; புதனுல் பணவரவு, நண்பர்கள் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது மக்கட்பேறு; செவ்வாயினுல் அதிக பணவரவு; சூரியனுல் 17-ம் தேதி வரை மதிப்புக்குள்ளாதல், வெற்றி, உடல்நல மேன்மை பிறகு சிறிது பொருள் நஷ்டம்; சுக்கிரனுல் பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள்.

## துலா

**(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸவாதி, விசாகம் 3-ம் பாதம முடிய)**

ராகுவினுல் மகிழ்ச்சி; சனியினுல் மற்றவர்களுடைய பொருள் கிடைக்கப் பெறல் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல்; குருவினுல் பண நஷ்டம், தன்னிலை இழத்தல்; சூரியனுல் மாதம் முழுதும் வெற்றி, மதிப்புயர்தல், உடல் நல மேன்மை, பணவரவு; சுக்கிரனுல் 18-ம்தேதிவரை கருத்துவேறுபாடுகள், இகழ்ச்சிக்குள்ளாதல், பிறகு பணவரவும் நணபர்களும்; புதனுல பணவரவு வெற்றி அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல்; செவ்வாயினுல் இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது பண நஷ்டம்.

## விருச்சிகம்

**(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய)**

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பொருள் நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல்; குருவினுல் பணவரவு, வெற்றி அல்லது தானிய வகைகள் கிடைக்கப்பெறல் அல்லது மக்கட்பேறு; புதனுல் இடையூறுகள்; செவ்வாயினுல பொருள் நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல், உடலில் காயம் ஏற்படல்; சூரியனுல் 17-ம் தேதிவரை பொருள் நஷ்டம் அல்லது உடல்நலம் கெடல் அல்லது ஏமாற்றங்களா. பிறகு வெற்றி; சுக்கிரனுல் 18-ம் தேதிவரை பணவரவு அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது நல்ல செய்கைகளை மேற்கொளல், இறுதியில் மதிப்புக் குறைதல்.

## தனுசு

**(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம முடிய)**

ராகுவினுல் தீயநடவடிக்கைகளில் ஈடுபடல்; சனியினுல் கருத்துவேறுபாடுகள் அல்லது உடல்நலம் கெடல் மற்றும் தீய நடவடிக்கைகளில் பங்கு பெறல்; குருவினுல் உடல்நலம் கெடல் கவலைகள் அல்லது பிரயாணமும், உடல்நலம் கெடலும்; புதனுல் பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள், வெற்றி, மக்கட்பேறு; செவ்வாயினுல் மனைவியுடன் கருத்து வேறுபாடு கொளல், கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல்; சூரியனுல் 17-ம்தேதிவரை உடல்நலம் கெடல், மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை, இறுதியில் பண நஷ்டம் அல்லது உடல்நலம்கெடல் அல்லது ஏமாற்றங்கள்; சுக்கிரனுல் மாதம் முழுவதும் பணவரவு, புதிய ஆடைஆபரணங்கள் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது வீடு வாங்குதல் அல்லது நல்லனவற்றில் ஈடுபடல்.

## மகரம்

**(உத்திராடம் 2-ம் பாதம் முதல, திருவோணம், அவிட்டம் 2-ம பாதம் முடிய)**

ராகுவினுல் பணவரவு; சனியினுல் மனைவி மக்களுடன் பிரிவு; குருவினுல் கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது பணவரவு; புதனுல் கருத்துவேறுபாடுகள்; செவ்வாயினுல வெற்றி, பணவரவு. சூரியனுல 17ம் தேதிவரை பிரயாணம், வயிற்று வலியினுல அவதியுறல பிறகு உடல் நலம் மேன்மை அல்லது மனைவிக்கு மன அமைதியின்மை; சுக்கிரனுல் 18-ம் தேதிவரை பெண்களினுல் கவலைகள். பிறகு புதிய ஆடை ஆபரணங்கள அலலது கேளிக்கைகளில ஈடுபடல் அலலது வீடு வாய்ப்பு.

## கும்பம்

**(அவிட்டம் 3-ம் பாதம முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)**

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல பிரயாணம்; குருவினுல் மனயமைதி பறிபோதல மற்றும் மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மை; புதனுல வெற்றி, மதிப்புயர்தல; செவ்வாயினுல எதிரிகளினுல அல்லது உடல நலம்கெடுவதால அல்லது தன் மக்கள் காரணமாக கவலைகளுக்குள்ளாதல; சூரியனுல 17ம் தேதிவரை உடல்நலம் மேன்மை பிறகு பிரயாணம், வயிற்று நோயினுல் அவதியுறல; சுக்கிரனுல 18ம் தேதிவரை உடல் நலம் கெடல, அலலது இகழ்ச்சிக்குள்ளாதல் அதன் பிறகு பெண்கள் மூலம் கவலைகளுக்குள்ளாதல்.

## மீனம்

**(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)**

ராகுவினுல பணவரவு; சனியினுல் பணவரவு அல்லது கேளிக்கைகளில ஈடுபடல; குருவினுல பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள் அலலது வேலையாட்கள் அலலது மக்கட்பேறு அல்லது வாகன வாய்ப்பு; புதனுல மனைவி மக்களுடன் கருத்துவேறுபாடுகள்; செவ்வாயினுல் உடல நலம் கெடல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல அவதியுறல் அல்லது தீய நட்புறவினுல கவலைகளுக்குள்ளாதல; சூரியனுல 7ம் தேதிவரை உடலநலம் கெடல் அலலது கருத்து வேறுபாடுகள் பிறகு உடலநலம் மேன்மை, எதிரிகளை வெற்றிகொளல்; சுக்கிரனுல் 18-ம் தேதிவரைபெரியோர்களது பாராட்டுதலகளுக்குள்ளாதல், உறவினர் வருகை, பணவரவு, நண்பர்கள் அலலது மக்கட்பேறு. இறுதியில உடல்நலம் கெடல், இகழ்ச்சிக்குள்ளாதல்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501

# திருமலை யாத்திரிகர்களுக்கான வசதிகள்

* திருப்பதியிலும் திருமலையிலும் யாத்திரிகர்கள் தங்குவதற்காக தி. தி. தேவஸ்-தானததாரின் இலவச சத்திரங்கள்

* திருப்பதியிலும் திருமலையிலும் குறைந்த வாடகையில் வசதியான காட்டேஜு-கள்

* திருப்பதியிலும் திருமலையிலும் இலவச மருந்தகங்கள்

* திருப்பதியில் முதல் சத்திரம், மூன்றாவது சத்திரம், விரைவு பேருந்து நிலையம் ஆகியஇடங்களிலிருந்தும் திருமலைக்குச் செல்லும்படியான பேருந்து வசதிகள்

* திருப்பதியிலிருக்கும் தி. தி. தேவஸ்தான சத்திரங்களிலிருந்தும், அலிபிரி (மலையடி வாரம்) யிலிருந்தும் யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திரு மலைக்கு எடுத்துச் செல்லும்படியான வசதிகள்

* திருமலைக்கு நடந்து செல்லும் யாத்திரிகர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் வகையில் வழிநெடுகிலும் இரவும்பகலும் போலீஸாரின் காவலுலாவு உண்டு

* வழி நெடுகிலும் குடிநீர் வசதிகள்

* இரவு நேரங்களிலும் யாத்திரிகர்கள் திருமலைக்கு நடந்து செல்வதால் வழி நெடுகிலும் நன்கு வெளிச்சம் பாயும் சிறந்த மின்விளக்கு வசதிகள்

* நடைபாதையில் முதலுதவி வசதிகளுடன் கூடிய வைத்தியசாலை

* திருமலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தில் (C. R. O.) செயற்படும் தகவல் கௌண்டரில் தரிசனம், தங்கும் வசதி போன்றவை பற்றிய தகவல்கள் இந்தியாவில் பெரும்பான்மையோர் பேசும் மொழிகளில் கிடைக்கும்

* திருமலையில் யாத்திரிகர்கள் பல்வேறு பகுதிகளில் தங்க நேரிடுவதால் அவர் களுக்கு உதவும் வகையில் இலவச பேருந்து போக்குவரத்து வசதி

* உடல்நிலை அல்லது நேரமில்லாமையின் காரணமாகவோ அன்றி வேறு பல காரணங்கள் முன்னிட்டோ ஸர்வதரிசன "க்யூ" வில் காத்திருக்க முடியா யாத் திரிகர்களுக்கு உதவும் வகையில், சிறப்பு தரிசன டிக்கெட்டு வசதி

* நாட்டில் உள்ள ஆந்திரா வங்கியின் குறிப்பிட்ட பல்வேறு கிளை அலுவலகங் களில் சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் விற்கப்படல்

